உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 11 } குரோதனஹு கார்த்திகைமீ கஉ. 1925ஹு நவம்பர்மீ 16உ { பகுதி 5

## கடவுள் வணக்கம்.

வேதாவை யிவ்வணம் விதித்ததே தென்னினுன்
வினைப்பகுதி யென்பனந்த
வினைபேச வறியாது நிற்கவிவை மனதால்
விளைந்ததான் மனதை நாடில்
போதமே நிற்குமப் போதத்தை நாடிலோ
போதமுநி னுல்விளக்கம்
பொய்யன்று தெய்வமறை யாவுமே நீயென்று
போக்குவர வற நிகழ்த்தும்
ஆதார வாதேய முழுதுநீ யாதலால்
அகிலமீ தென்னையாட்டி
ஆடல்கண் டவனுநீ யாடுகின் றவனுநீ
யருளுநீ மௌனஞான
தாதாவு நீபெற்ற தாய்தந்தை தாமுநீ
தமருநீ யாவுநீகாண்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே. (1)

அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே யாரமிர்தே யென் கண்ணே யரிய வான, பொருளனைத்துந் தரும்பொருளே கருணை நீங்காப் பூரணமாய் நின்றவொன்றே புனித வாழ்வே, கருதரிய கருத்ததனுட் கருத் தாய் மேவிக் காலமுந்தே சமும்வகுத்துக் கருவியாதி, விரிவினையுங் கூட்டி யுயிர்த் திரளையாட்டும் விழுப்பொருளே யான்சொலும்விண் ணப்பங்கேளே.

என்னையுன்னை யின்னதிது வென்னுமறி விற்குநிலை
தன்னையரு ளென்ற தருணத்தி—லன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா யையனே
யுள்ளத்தி னுள்ளே யுணர். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. ஆன்மாவினுக்கு யாதொரு சுதந்தரமுமில்லை. அதன் பூர்வ வினைக்குத் தகுந்தபடி இறைவன் அறிவை விளக்குகின்றனன். அந்த அறிவோ மனத்தின் மூலமாகத் தனுகரண புவன போகங்களில் வியாபாரஞ்செய்து ஆகாமிய வினையைச் சேகரித்துக்கொள்ளும். அந்த ஆகாமியம் பிராரத்துவ வினையாக முடிய அவ்வினைக்குத் தக்கவாறு இறைவன் ஆணையினின்று பிரமாவானவன் ஆன்மாவிற்கு வேண்டியவற்றை விதிக்கின்றனன் என்பது கருத்து.

வினைப்பகுதி=வினையின் கூறுபாடு.

போதம்=அறிவு.

விளக்கம்=விளக்கப்படுவது.

தெய்வமறை=தெய்வத்தன்மை பொருந்திய வேதங்கள்.

போக்குவரவு அற=போதலும் வருதலும் ஒழிய.

ஆதாரம்=இடம்.

ஆதேயம்=இடத்தில் நிகழ்பொருள். ஆதாரம் ஆதேயமாகிய இரண்டிடத்தும் இறைவன் நிறைந்திருத்தலால் 'ஆதார ஆதேயம் முழுதுநீ' என்று சொல்லப்பட்டது.

அகிலம்=பூமி.

தாதா=ஈகையாளன்.

தமர்=சுற்றத்தார்.

உலகமும் அதன்கண்ணுள்ள பொருள்களும் இறைவனே யாதலால், உலகத்தில் தன்னை நடிப்பிப்பவன் முதல் எல்லாம் அவனே என்பார் 'ஆடல் கண்டவனு நீ.........யாவு நீ' என்றார்.

"ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானுமிங் கொன்றொடொன்றை
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை
காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின் வழி
ஆட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே"

என்று பட்டணத்தாரும்,

"அப்பன்நீ அம்மைநீ ஐயனுநீ அன்புடைய மாமனும் மாமியும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும்நீ
துய்ப்பனவும்உய்ப்பனவும்தோற்றுவாய்நீ துணையாம்என்நெஞ்சத்துறப்பிப் [பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்துநீ இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன்நீயே"

என்று தேவாரமும்,

"தானே யாகி நிறைந்தெல்லா வுலகும் உயிரும் தானேயாய்த்
தானே யானென் பானாகித் தன்னைத் தானே துதித்தெனக்குத்
தேனே பாலே கன்னலே யமுதே திருமா லிருஞ்சோலைக்
கோனே யாகி நின்றொழிந்தான் என்னைமுற்றும் உயிருண்டே"

என்று திருவாய்மொழியும் கூறுவதும் அறிதற்பாற்றும்.

2. தாம் பிரத்தியக்ஷமாகக் கண்ட பொருள்களுள் இனிமையும் அருமையும் என எவ்வெவற்றினை மதித்தனரோ அவ்வப் பெயர்களால் இறைவனை யழைக்க ஆசைகொண்டு பழச்சுவை முதல் விழுப்பொருளீறாகக் கூறிப் புகழ்ந்தனர். ஆன்மாக்களின் கன்மத்திற்கீடாக இறைவன் அவரவர்க்கேற்ற போகத்தினை யூட்டுவித்து இயக்குவிப்பானென்பார் 'கருவியாதி விரிவினையுங் கூட்டி யுயிர்த்திரளை யாட்டும்' என்றார்.

அருள் பழுத்த=அருள் வடிவமாகப் பழுத்த.
ஆரமிர்தே=அருமையான அமுதமே.
புனிதம்=பரிசுத்தம்.
கருத அரிய=நினைத்தற்கு அருமையான (கூடாத).
திரள்=தொகுதி.
விழுப்பொருள்=மேலான பொருள்.

3. ஆன்மாவினுக்கு அன்னியமாக மனமொன் றிருக்கிறதென்றும், மனத்திற்கு அன்னியமாய் ஆன்மாவொன்றிருக்கிறதென்றும் பேதபுத்தி பாராட்டாமல் அபேதமாக நின்ற அவசரத்தில், திருவருள்தாக்கும் நிலைமையினைப் பிறருக்கு எடுத்துக்கூற முடியாது; தன்னுள்ளேமாத்திரம் சிந்திக்கும் தன்மையுண்டாம்.

என்னை உன்னை=என்னையும் உன்னையும்.
என்னமல்=என்று சுட்டாமல்.
தருணம்=சமயம்.
பெற்றி=தன்மை.

---

# ஆனந்தபோதினி

குரோதனஸு கார்த்திகைமீ கஉ

## நோய்கள் எங்கிருந்து வருகின்றன.

மனிதர்க்குக் காலபேதத்தினால் எண்ணிறந்த நோய்களுண்டாகி வருகின்றன. வைத்திய சாஸ்திரங்களில் நிபுணர்களாயிருந்த

நம் பெரியோர்கள் பண்டைக்காலத்தில் தாங்கள் செய்துவைத்த ஆயுர்வேத நூல்களில், நோய்த் தோற்றங்களைக் கூறுமிடத்து, வாத, பித்த, கப சம்பந்தமான பற்பல வியாதிகளையும், அவற்றின் கிளையாக உண்டாகும் அநேகம் நோய்களையும் பெரும்பான்மையும் வரையறுத்துக் கூறியிருக்கின்றார்கள். அவைகளுண்டாம் காரணங் களையுங் கூறியிருக்கின்றனர். அவற்றின் சார்பாகவே முற்காலத்தில் பற்பல பிணிகளுண்டாவதும், அவற்றிற்கு வைத்தியர்கள் சிகிச்சை செய்வதும் நடந்து வந்திருக்கின்றன. இக்காலத்திலோ அவற்றுள் அடங்காதவைகளும், நாம் முன் எப்பொழுதும் கேள்விப்படாத வைகளும், கண்ணால் பார்க்காதவைகளுமான அற்புத வியாதிகள் பற்பல நாடோறும் புதிது புதிதாக உண்டாய் முளைத்துக்கொண்டே யிருக்கின்றன. இவற்றிற்கு இங்கிலீஷ் டாக்டர்களாலும், யூநானி ஹக்கீம்களாலும், ஆயுர்வேத பண்டிதர்களாலும் பற்பல நாமங் களும், சிற்சில காரணங்களும் அற்புதமாகக் கூறப்பட்டு அக்கரை யுடன் அததற்குத்தக்க சிகிச்சைகளும் செய்யப்பட்டு வருகின்றன. எனினும் அவற்றுள் சிலவற்றின் பெயர், காரணம் முதலியவற்றைத் தெரிந்து கூற முடியாமலும் அவற்றிற்குத் தக்க ஔடதப்பிரயோ கங்கள் செய்யமுடியாமலும் வைத்தியர் தியங்குகின்றனர்.

இப்படி வைத்திய நிபுணர்களையும் கலங்கச் செய்யும்படியான இந்தநூதன நோய்கள் எங்கேயிருந்து எப்படி வருகின்றன வென் பதைப்பற்றி ஆராயப் புகுந்தால், சிலவியாதிகளின் காரணம் தெரியாவிடினும் பல வியாதிகளின் உற்பத்திக்குக் காரணத்தை அறிஞர் உணர்ந்துகொள்ளக்கூடும். இப்போதைய டாக்டர்களும், ஆயுர்வேத பண்டிதர் முதலியவர்களும் தங்கள் சாஸ்திர ஆராய்ச்சி யாலும், அனுபவத்தாலும், யுக்தியாலும் ஆராய்ந்து, அவ்வியாதி களின் காரணங்களை வெளிப்படுத்தி வருகின்றார்கள். அவைகளெல் லாம் சிறந்தவைகளும் ஒப்புக்கொள்ளக் கூடியவைகளுமே. அவற்றி லிருந்தே நூதனமாக நோய்கள் உற்பத்தியாகின்றன; அவை எவை யெனில் மனிதர் உபயோகிக்கும் உணவுப்பொருள்களின் தோஷங் கள், மனிதருடைய இயற்கைக்கு விரோதமான பழக்கவழக்கங் கள், கெட்டகாற்றுக்கள், கெட்டஜலம், தொற்றுவியாதிகள் பாவி யிருக்குமிடத்திற் சஞ்சரிப்பது, பெருந்தீனி, மிகுந்த நித்திரை முதலியவைகளும், இன்னும் பலவுமாம். இவற்றாலேயே வியாதிகள் உண்டாகின்றன வெனினும், பெரும்பான்மையான நோய்கள்

ஆகார வஸ்துக்களின் தோஷத்தினாலேயே உண்டாகின்றன வென்பதை அறிஞர் பலரும் அறிவர்.

காலதோஷத்தால் நாட்டில் மழை குறைய விளைவு குன்றிப் பஞ்சம் ஏற்பட்டு வருவதால் மனிதர்க்கு ஆகாரப் பொருள்கள் கிடைப்பது அருமையாயிருக்கின்றது. அதனால், ஒவ்வொரு பொருளும் விலையேற்றமுடையதா யிருக்கின்றது. இருபது ஆண்டுகட்கு முன்னர் ஒரு ரூபா கொடுத்து வாங்கின ஒரு பொருளுக்கு இப்போது ஐந்து ரூபா கொடுக்கவேண்டியிருக்கிறது. இப்படி ஆகார வஸ்துக்கள் விலையேற்றமான காலத்தில், தனவந்தர்கள் கஷ்டமின்றி அவற்றை வாங்கி உபயோகப்படுத்துகிறார்கள். ஏழை ஜனங்கள் பணக்கஷ்டத்தால் கொஞ்சம் விலைகுறைவான பொருள்களையே வாங்கப் பிரயத்தனப்படுகிறார்கள். நம் நாட்டில் வறிஞரே பலவழியிலும் மிகுந்திருக்கின்றன ராதலாலும், அவர்களாலேயே வியாபாரம் அதிகமாக நடக்கவேண்டியிருக்கின்ற படியாலும் அவர்களுக்குத் தக்க விலைகுறைவான சற்றுத் தாழ்ந்த பொருள்களையே வியாபாரிகள் விற்பனைக்குத் தயாரிக்கவேண்டியவர்க ளாகிறார்கள். அங்ஙனமாகும்போது இயற்கையில் உயர்ந்தனவாகவே உற்பத்தியாகும் பொருள்களைத் தாழ்ந்தவைகளாக்கும் ஒரு நூதன சிருஷ்டித் தொழிலை மேற்கொள்ளுகிறார்கள். அங்ஙனம் சிருஷ்டிப்பதிலும் தாங்கள் ஏழைகள் பொருளைக்கவர்ந்து பணக்காரராக விரும்பி அவ்வஸ்துக்களைக் குறைந்த செலவில் சிருஷ்டித்து அவற்றிற்கும் அதிகவிலை யேற்படுத்தி அதனை ஜனங்களுக்கு மிகவும் குறைந்த விலையாகத் தோற்றும்படி செய்கிறார்கள். இவ்வாறு தந்திரமாக அவர்கள் ஏற்படுத்தும் அதிக விலையும், மற்ற உயர்ந்த பொருள்களின் விலையை நோக்க ஜனங்களுக்குச் சகாயமானதாகவே தெரிகின்றது. வியாபாரிகள் செய்யும் இவ்வகைத் தந்திரத்தால் ஆகாரப் பொருள்களின் இயற்கை மாறுந்தன்மை அதிகரித்து விட்டது. அங்ஙனம் அதிகரிக்கவே, பணக்காரர்களுக்கு வேண்டுமென்று கூட உயர்ந்த இயற்கைப் பொருள்கள் வைப்பதையும் விடுத்து முழுவதையும் போலிப் பொருள்களாகவே அவர்கள் மாற்ற ஆரம்பித்து விட்டார்கள். ஆனால் எல்லோருமே இப்படிச் செய்யவில்லை. சுத்தமான பொருள்களை வைத்து விற்போருமிருக்கின்றார்கள். எனினும் அவர்கள் குறைந்த அளவாக இருப்பதால் மேகபடலத்தில் எங்கோ ஓரிடத்தில் தோன்றும் நக்ஷத்திரம்போல அருமையாக

விளங்குகின்றார்கள். அவர்களைக்கண்டு சுத்தமான சரக்குகள் வாங்கப் பிரயத்தனப் பட்டால் நச்சுச் செடிகளே மிக்க ஓர் மலையில் ஓரிடத்தில் அருமையாயிருக்கும் சஞ்சீவியைத் தேடிக் கண்டுபிடிப் பதுபோன் றிருக்கின்றது.

மேற்கூறியபடி போலிச்சரக்கின் சிருஷ்டிகர்த்தாக்கள் ஏற் பட்டபின், உணவுப் பொருள்கள் எவ்விதம் இயற்கை மாற்றமடை கின்றன வென்றால் அவற்றுள் ஒவ்வொன்றையும் விவரமாக எடுத் துக் கூறுதல் எவராலுமியலாது. எனினும் சிலவற்றை மாத்திரம் விளக்கி எடுத்த விஷயத்தை முடிப்பாம்.

ஆகாரவஸ்துக்களில் அரிசிதான் பிரதானமானது. இதனை, வியாபாரிகள் படாதபாடெல்லாம் படுத்துகிறார்கள். முகத்தலள வையில் படி அதிகமாகும்பொருட்டும், எடுத்தலளவையில் நிறை அதிகரிக்கும்பொருட்டும் அளவுக்கு மிஞ்சித் தண்ணீர்த் தொட்டி களில் நெல்லை ஊறவைத்துச் சகிக்க முடியாத துர்நாற்றம் கிளம்பிய பின் வேகவைத் துலர்த்தி அரிசியாக்கப் படுகின்றது. இதைக் கையிலெடுக்கும்போதே மூக்கைப் பிடித்துக்கொள்ளும் நாற்றம் கிளம்புகிறது ; உலையிலிட்டாலோ ஈரற்குலை நடுங்குகிறது; சாத மாக்கி இலையிலிட்டாலோ தலை சுழலுகிறது; வாயிற்போட்டாலோ பாயிற்படுக்கும் நோய் பேய்போல்வந்து பிடிக்கிறது. இன்னும் இந்த அரிசியில் மரக்கால் அளவை அதிகப்படுத்தும் பொருட்டுக் கல்லும் மண்ணும் கலக்கப்படுகின்றன.

பருப்புவகைகளுடன் போலிப் பருப்பினங்கள் பல இரக்க மின்றிக் கலக்கப்படுகின்றன. அவை, பருப்புக்குள்ள குணங்களைக் கெடுத்து வெறுப்புக்கிடமான பல உபத்திரவங்களைக் கிளப்பி விடுகின்றன. நெய்யோ ஐயோ! வென்று கூக்குரலிடக்கூடியதா யிருக்கின்றது. எருமை நெய்யாவது, பசு நெய்யாவது, கேவலம் ஆட்டு நெய்யாவது கலப்பில்லாமல் வாங்கவேண்டுமென்றால் அது முடிகிறதில்லை. நெய் வியாபாரிகள் செய்யும் பேதத்தை எழுதுவ தென்றால் கையும் நடுங்கும். இதில் பல தாழ்ந்த எண்ணெயினங்கள் சேர்ப்பது ஒரு பக்கமிருக்க, வாயினாலும் சொல்லத்தகாத சில அருவருக்கத்தக்க ஜீவ ஜெந்துக்களின் நிண வினங்களெல்லாம் மிஸ் ரம் செய்யப்படுகின்றன. நீரே பாலும் மோருமாக விளங்குகின்றது; மாவினங்களெல்லாம் வெண்ணெயாய் விட்டன. எள்ளின்தைலம் கலப்பில்லாமல் காண்பது அரிதாயிருக்கின்றது ; வேர்க்கடலை எண்

ணெயும், வேறுபல தாழ்ந்த எண்ணெய்களும் நல்லெண்ணெயாக விற்கப்படுகின்றன. கடுகில் போலிக்கடுகும், மிளகில் போலிமிளகும், சீரகத்தில் போலிச் சீரகமும், பெருங்காயத்தில் வெறுங்காயமும், ஏலரிசியில் நத்தைச்சூரி விதையும், கலக்கப்படுகின்றன. முத்துச் சோளக்கதிரின்மேல் உரோமம்போல் மூடிக்கொண்டிருக்கும் ஒரு விதமானவஸ்து சிவப்புச் சாயத்தில் தோய்க்கப் பெற்றுக் குங்கு மப்பூவுடன் கூட்டப்படுகின்றது. புளியைக்கண்டாலோ புலியைப் பார்த்ததுபோலிருக்கின்றது; அது, கொட்டையும்,கோதும்,கல்லும், மண்ணும், தூசியும், நீரும் சேர்த்து மிதித்துத் துவைக்கப்பட்டு மிக்க ஆபாசமாக விற்கப்படுகின்றது. வெல்லமோ சொல்லவேண்டிய தில்லை. கோணியின் நாரும், ஈயும், எறும்பும் செங்களிமண்ணும், சேர்த்து மிதிக்கப்பட்டும் கோணிகளில் போடப்பட்டும் கண்ணீர் விட்டழுவதுபோல் கசிந்தொழுகிக் கொண்டு வண்டியில் வரு வதைக்கண்டால் அதனைக் கையினாலும் தொட மனம் வராது. இவ் விதமே எல்லாச் சரக்குகளும் இயற்கை மாறி வருகின்றன.

இவையன்றி அருவருப்பான விடங்களில் போட்டுப் புரட் டிய காய், கீரையினங்களும், மிக அழுகிப்போன வேறுவகைக் கறி பதார்த்தங்களும், அழுகித் துர்நாற்றம் வீசும் பழவகைகளும் விற் கப்படுகின்றன.

ஜனங்கள் வேறு விதியில்லாமல் இவற்றையெல்லாம் வாங்கி உணவாக்கி உபயோகிக்கிறார்கள். இவற்றுள் ஒன்றை உட்கொண்ட அன்றே நூதன வியாதியொன்று தோன்றி விடுகின்றது. இப் படியே கெட்டுப்போன பற்பல வஸ்துக்களாலும் பற்பலவியாதிகள் தோன்றிக்கொண்டே யிருக்கின்றன. அவற்றால் உண்டாம் ஜனச் சேதத்திற்கும் கஷ்டத்திற்கும் அளவேயில்லை. இப்படி ஆகாரத்தி னாலேயே அவஸ்தையை உண்டாக்கிக் கொள்ளும் ஜனங்கள் வைத்தியரிடம் சென்றால் அவர்கள் என்னசெய்வார்கள் பாவம்! அவர்களுக்கு மருந்தைக் கொடுத்துப் பத்தியம்சொல்லி அவர்களை அனுப்புகிறார்கள். அவர்கள் மருந்தைச் சாப்பிட்டு விட்டுப் பத்தியத் திற்கு அந்தக் கெட்ட வஸ்துக்களையே வாங்கி உபயோகப்படுத்து கிறார்கள். அதனால் வியாதி இலகுவில் நீங்குவதில்லை. அந்தோ! பரி தாபம்! வியாபாரிகள் அதிக விலை வாங்கிக்கொண்டாவது நல்ல பொ ருள்களை விற்பார்களானால் ஏழை மனிதர்களுக்கு இவ்வளவு கஷ்ட முண்டாகாது. இத்துன்பங்களைக் கவனித்து நீக்குவோர் யாவர்?

ஜனங்களால் இவற்றை நீக்கிக்கொள்ளுதல் முடியாது. காருண்ய முள்ள ஆட்சியாளர் இவற்றைக் கவனிக்க வேண்டும், தவறினால் ஜனங்களுக்குச் சுகாதாரத்தை நாடும் நகர சங்கத்தார் இத்தீங்குகளை யொழிக்க முயற்சி செய்யவேண்டும். இவர்கள் ஜனங்களின் சுகா தார நிலைகளுக்கான பல வழிகளிற் கவனஞ்செலுத்தி வருகின்றார் களெனினும், இத்தகைய கெட்ட வஸ்துக்களின் விற்பனையை ஒழிப் பதில் அநேகமாக முயற்சி யெடுத்துக்கொள்ளவில்லை. எனினும் சில மேதாவிகள் தூண்டுதல் செய்தால் இவர்கள் கவனித்து இந் நன்மையைச் செய்தல்கூடும். இது செய்யமுடியாத காரியமன்று; அறிஞர்க்கு மிக எளிதானதே. எளிதாயினும், போலிப் பொருள் களும், கெட்ட உணவுப்பொருள்களும், அழுகற் சரக்குகளும் ஒழி யும்படி செய்வதால் ஜனங்களுக்குப் பெரிய நன்மையுண்டு. நம் நாட்டினர் அளவிறந்த நன்மைகளை யடையவேண்டுமென்னும் நோக் கத்துடன் ஊக்கங்கொண்டு பெரும் பெரும் காரியங்களிலெல் லாம் அரிய முயற்சி யெடுத்துவரும் பேரறிவாளர்களெல்லாரும் இச் சிறிய காரியத்தைச் செய்யத் துணிவார்களானால், இதனால் மனிதர் க்கு முக்கியமாகிய ஜீவாதாரம் ஏற்படும். அதன்மேல் பல நன்மைக ளுண்டாவதோடு, தாங்கள் குறித்த பெருங் காரியங்களும் நிறை வேறும். இந்தப் பொது நன்மையான விஷயத்தில் மேதாவிகள் புத்தி செலுத்தும்படி இறைவன் அருள்புரிவானாக.

ஓம் தத் ஸத்.

---

## ஆரம்பக்கல்வியினனுதாபம்.

நிகழ்கால ஆரம்பக்கல்வியைக் கவனிக்குங்கால் நம் சகோதரனைவரும் தெருமரலெய்துவார்களென நினைக்கின்றோம். ஆரம்பக்கல்வியின் முறை வரவர மாறுதலடைந்துகொண்டே வருகின்றது. தற்பொழுது கற்பிக் கப்படும் கல்வியானது குழந்தைகளுக்கு எளிதிற் பிடிபடும்படியான முறை யென்று கல்வியதிகாரிகள் கருதுகின்றனர்.

"அரிதரிது மானுட ராதலரிது" என்பது மானுட ஜன்மத்தினுயர்வை யுணர்த்த அருந்தமிழ்க் கன்னியாம் ஔவைப் பிராட்டியா ரருளிச்செய்த வாக்கியம். இம்மானிட ஜன்மம் கடைத்தேறுவதற்குக் கல்வியே முக்கி யம். ஏனெனில், புண்யமிது, பாபமிது, நன்மையிவை, தீமையிவை, செய் யத்தகுந்தன இவை, செய்யத்தகாதன இவை, கடவுள் ஒருவனுண்டு, அவ னுக்கும் நமக்குமுள்ளபேதமிவை, பாபிகளடையும் கதியிது, புண்யாத்மாக் களெய்தும் பதவியிது, ஈஸ்வரனை ஏன் பஜிக்கவேண்டும்? எவ்வாறு பஜிக் கவேண்டும், என்னும் விஷயங்களை யுணர்வதற்குக் கல்வியே அடிப்படையா

கின்றது. மானிடஜன்மம் சற்கதியடைவதற்குக் கல்வியாதாரமாதலின் "கல்வியில்லாதவன் கண் இல்லாதவன்" என்பர் ஆன்றோர். கண் என்பது இங்கு அகக்கண் என்னும் பொருளை யுடைத்து. இக்கல்வியை ஆரம்பத்தி லிருந்தே நம் பெரியோர்கள் பக்திமார்க்கத்திலேயே போதித்து வந்தார் கள். எவ்வாறெனில், முதல் முதலில் நன்னாள் ஏற்படுத்தி நறுமணங்கமழ வாழை கமுகுகளை வரிசையாய்க் கட்டி, பொற்கோலமிட்டு, சுற்றத்தாரும் நண்பருஞ்சூழ, கோயிலுக்குச் சென்று "தங்கக்கரிமுகத்துத்தூமணியை" வழிபட்டு, நாரீகேளமுடைத்து வலம் வந்து வணங்கி, இல்லமேகி, குரு முன்னுட்கார்ந்து முதல் முதலாக "ஓம்: நமோநாராயணாய வித்தம்" என்று அக்ஷராப்பியாசம் செய்விப்பர். "ஓம்!" என்னும் பிரணவத்திற்கு உரை எழுதினர் உளரோ! அதல, விதல முதற் பாதலம் வரையிலும், பூலோகம், புவர்லோகம் முதற் சத்யலோகம் வரையிலும் ஏகோபிதமாய்க் கேட்கும் சப் தமிதுவன்றோ! சர்வாந்தர்யாமியாய் விளங்கும் சாக்ஷாத் பரப்பிரம்மத்திற் கும் இதற்கும் வித்தியாசமுண்டோ! இவ்வாறு, கல்வியைப் பிரணவத்தைக் கொண்டு தொடங்கி, பின்பு, ஆரியமோ, தமிழோ, தெலுங்கோ, எதெது அவரவர்கள் தாய்ப்பாஷையோ அதே மொழியிலுள்ள அக்ஷர வரிசை களைப் போதிக்கவாரம்பிப்பார்கள்.

நிற்க, நம் தமிழ்நாட்டிலே, மேற்கூறியவாறு அக்ஷராப்பியாசமான பின்பு, உயிர் மெய் எழுத்துக்களைப் புகட்டி, பின்னர் சிறு சிறு வார்த்தை களைச் சொல்லிக் கொடுத்துவிட்டு மேலேறவேற, உலகத்திற்கெல்லாம் எது உண்மையை யளிக்குமோ, எது பாபத்தைப்போக்கிப் புண்ணியத்தை யுண்டுபண்ணுமோ, எது கொடிய நரகக்குழியை நீக்கி மோக்ஷ சாம்ராஜ் யத்தை யடையச்செய்யுமோ, எது காமக்குரோதலோப மோகமதமாச்சரிய மென்னு மிச்சைகளைப் போக்கடிக்குமோ, எது தனேஷணை, தாரேஷணை, புத்ரேஷணை என்னு மீஷணாத்திரயங்களை யொழியச் செய்யுமோ, எது "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார் தோன்றலிற் றோன்றாமை நன்று" என்னும் திருவள்ளுவ நாயனாரது திவ்ய வாக்கியத்திற்கிணங்க,கதி ரவன் பிரகாசத்தைப்போன்றும், சமுத்திரத்தினலைகளைப்போன்றும் புக ழைப் பரவச்செய்வதில் முன்னிற்குமோ அதற்கு மூலாதாரமாய் விளங்கும் "அறஞ்செய விரும்பு" என்னும் அருமைமிகு பழமொழியையும், பயிற்று வித்துப் பின்பு அந்த தருமத்தை நடாத்துங்காலை விலக்கவேண்டியதை, "ஆறுவது சினம்" என்னும் முதுமொழியாற் கூறி,அதன்மேல் ஞானார்த்தத் தையே கொடுக்கும் பாக்களைச் சிறிது சிறிதாகப் புகட்டிப் பின்பு பெரிய புராணம், குருபரம்பரை முதலான கிரந்தங்களையும் போதிப்பர். இக்கல்வி முறையில், போதித்துவந்த வரிசையையும் ஆராய்ச்சியுடன் பின்னர் எழுது வோம்.

தற்கால கல்வியைக் கவனிக்கின் ஆ! ஹா! மனம் பதைக்கின்றது. இப் புண்ய பூமிக்கு இவ்விதக் கேடும் சம்பவிக்கலாமா எனவு மெண்ணவேண்டி

2

யிருக்கின்றது. மேனாட்டு நாகரீக முயற்சியால் நம் நாட்டுச் சகோதரர்கள், பஞ்சாக்ஷரத்தை ஜபித்து விபூதியையோ, அஷ்டாக்ஷரத்தை நினைந்து திருநாமத்தையோ, பாண்டுரங்கத்தை தியானித்து ஊர்த்துவ புண்டரத்தையோ, லலாடத்திலிடுவது அநாகரீகமென நினைக்கின்றனர். அவ்வாறு அணிபவர்களைப் பைத்தியக்காரர்களென்றும் (Crack) நினைக்கின்றனர். "நீறில்லா நெற்றி பாழ்" என்று பெரியார் சொல்லிவைத்த மஹாவாக்கியத்தை நம் சகோதரர்கள் மறந்துவிட்டனர்.

இவர்கள் மேனாட்டு நாகரீகமென்னும் பெருங்குகையி லகப்பட்டு வெளிவரும் வழி தெரியாதிருப்பதாலும், பெரும்பான்மையோர் மேனாட்டாரிடமே உத்தியோகம் பார்த்து வருகின்றார்களாகையாலும், சாதாரணமாக வார்த்தை சொல்லும் வயது வந்தவுடன் பிள்ளைகளைப் பள்ளிக்கூடமனுப்பி விடுகின்றனர். கல்விச்சாலை செல்லும் மாணவர்களுக்குத் தாய்மொழியில் உயிரெழுத்துச் சொல்லிக்கொடுக்கும்போதே, ஆங்கில எழுத்துக்களையும் சொல்லிக் கொடுத்துவிடுகின்றார்கள். "ஓம்! நமோ நாராயணாய ஸித்தம்" என்று கற்பித்துக்கொடுக்கும் முறை மழுங்கிவிட்டது. இவ்வாறு, ஏதோ பெயருக்குமாத்திரம் அக்ஷராப்பியாசமானவுடன், "அறஞ்செய விரும்பு" என்னும் பழமொழிகளைப் போதிக்கும் வழிபோய் "கண்ணில்லாதவன் குருடன்", "காலில்லாதவன் நொண்டி", 'மூக்கில்லாதவன் மூக்கறையன்" என்பவையே அப்பழமொழிகளைப் போதிக்கும் ஸ்தானத்தில் நிற்கின்றன. ஏனெனில் இது மனிதர்களறியமுடியாத வேதாந்த ரகஸ்யமல்லவா! புண்யார்த்தமான தத்துவத்தை ஸ்தாபனஞ் செய்யும் மஹா ஸ்ருதி வாக்கியமல்லவா!

இதையொத்த பாடங்கள் சிறிது போதனையானவுடன் "நல்லபையன்" "தட்டாத்திப்பூச்சி"முதலான பாடங்களையுடைய புஸ்தகங் (Reader) களை வாசித்து, வகுப்பு ஏற ஏற ஆங்கிலபாஷை பிரதமபாடமாகவும், தாய்மொழி உப (அதம) பாடமாகவும் போதிக்கப்படுகின்றன. தேசசரிதம், சுகாதாரம் முதலான பாடங்களும் ஆங்கிலத்திலேயே போதிக்கப்படுகின்றன. வகுப்பு மாற்றுவதிலும் ஆங்கிலத்தில் தேறியிருந்தால் மற்ற தாய்மொழிகளைக் கவனிப்பது துர்லபம். இஃதே, நம் தாய்மொழி தாய்நாடு இவற்றின் க்ஷீணதிசைக்கு முக்கியகாரணமாகும். இவ்வாறு கல்விகற்று வரும் மாணவர்கள் எவ்வாறு சுத்த தாய்மொழியில் பேசமுடியும். "நான் பீச்சுக்கு லாஸ்டு ஈவினிங் போனேன்" என்றுதான் பேசுவார்கள். ஆரம்பக்கல்வி இவ்வாறிருக்குமாகில் நாமவர்களைக் குறைகூறுவதிற் பிரயோஜனமில்லை. மேலும் திருத்தமுமடையாது. தற்காலப் பெண்கல்வியைப் பற்றிச் சென்ற கிருத்திகாமாத ஆனந்தபோதினியில் திருத்தமாக எழுதினோம். இவ்வாறு கற்கப்புகும் மாணவர்களுக்கு ஈஸ்வர விசுவாசமுண்டாவது துர்லபம்.

இருபாலர் கல்வியு மிக்கேட்டையடைந்தால், ஈஸ்வரபக்தியும், நீதியும்,

செழுமையுமோங்கி நின்ற நம் பாரதநாடும், தெய்வபாஷையெனத் தகும் தாய்மொழிகளும் என்று முன்னேற்றமடையும்? நம் "ஆனந்தபோதினி" போன்று தேசத்திற்கும், பாஷைக்கும் சுயாலங்கருதாதுழைத்துவரும் சஞ்சிகைகள் எத்தனை எழுதினுமென்ன பயனுண்டு? இதில் முயற்சியெடுத்து முறைப்படி, பழைய வழக்கங்களைத் தழுவி எழுதப்படும் புஸ்தகங்கள் அநேகமாய்ப் பாடபுத்தகமாக ஏற்படுத்தப்படுவதில்லை.

இதை வாசிக்கும் நம் நண்பர்கள் நாம் சொல்வதை வலக்காதில் வாங்கி இடது செவியால் விட்டுவிடாது நமது தொன்றுதொட்ட பழைய முறையை ஸ்தாபிதம் செய்யக் கல்வியிலாகா அதிகாரிகளைத் தூண்டுதல் வேண்டும். தம் தம் குழந்தைகளுக்கு மேற்கூறியவாறு கல்வியாரம்பம் தத்தமதில்லத்திலேயே நடாத்தி, பின்பாவது பள்ளிக்கனுப்பிவைக்க வேண்டும்; தம் வீடுகளில் உண்மை நூல்களைப் போதிக்கவேண்டும். கல்வி இலாகா அதிகாரிகளும் இதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தல்வேண்டும். பிரணவப் பரப்பிரஹ்ம ஸ்வரூபியான கடவுளும் தம் கருணைகடாக்ஷ வீக்ஷண்யத்தை இவ்விஷயத்தில் அருளுமாறு அவர் சரணகமலங்களைத் துதிசெய்வோமாக.

S. V. வரதராஜய்யங்கார், "சரஸ்வதி நிலயம்"
உறையூர், திருச்சி.

---

## உபவாசம்.

உபவாசம் என்றால் (உப=சமீப, வாசம்=வசித்தல்) சமீபவாசமென்றர்த்தம். அதாவது—ஜீவாத்மாவானது பரமாத்மாவின் சமீபத்தில் வசித்தலாம். அஞ்ஞானிகள் இக்கருத்தைத் தெரிந்துகொள்ளச் சக்தியின்றி வீணுகப் பட்டினியிருந்து காயத்தைக் கிலேசிக்கச் செய்கிறார்கள். இதற்குப் பிரமாணம்:—

"உப ஸமீபேயோ வாஸோ,
ஜீவாத்ம பரமாத்மனோ:
உபவாஸ: ஸவிஜ்ஞேய:
நது காயஸ்ய ஸோஷணம்"

என்பதாம்.

"உபவாசமென்பது ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஸமீபவாசமாம்; காயத்தைச் சோஷிக்கச் செய்வதல்ல" என்று ஆன்றோர் கூறியுளர்.

ஜீவப்பிரஹ்மைக்கியமே முக்தி யெனப்படுகிறது. இவ்வைக்யமானது ஏகாக்ரசித்தத்தால் கிடைக்கிறது. இந்நிலையானது யோகாப்பியாசத்தாலுண்டாகிறது.

யோகாப்பியாசஞ் செய்பவனுடைய தேகம் அரோகதிடகாத்திரமாயிருக்கவேண்டும். சரீரந் திடமாயிருக்கவேண்டுமானால் ஆகாரநியமம் இன்

ரியமையாதல்லவா ? இவ்வாறிருக்கப் பட்டினி கிடப்பது அறியாமையே யாகும்.

நாம் பட்டினியாக விருப்பதால் பித்தாதிக்க முண்டாகிறது. அதனல், அநேக வியாதிகள் சம்பவிக்கின்றன. வியாதியஸ்தன் எவ்வாறு யோக சாதனையியற்ற முடியும் ? ஒருபோதும் இயலாது. ஆனதுபற்றி அவனுக்கு உபவாசபலன் சித்திப்பதில்லை.

சில பணக்காரர்கள் யாதொரு சாதனையு மின்றிச் சோபாவில் சாய்ந்து கொண்டிருப்பதோடு, நன்ருய்த் தூங்குவது வழக்கம். இப்பேர்பட்டவர்கள் பட்டினிகிடப்பதால் சரீர ஜாட்யம் நீங்கும்.

தவிர, இன்னுஞ் சில காமியகர்மிகள் ஏதோவொரு அற்பபலனைச் சித்துப்பட்டினியிருப்பது வழக்கமாயிருந்து வருகிறது. இவர்களுக்குப் போகபலனே தவிர, யோகபலம் சித்திப்பதில்லை. ஆகையால், இவர்களைப் பற்றி நாம் பேசவேண்டிய தனுவஸ்யம்.

"நாவார்த்தீஹி பவேத்தாவத்
யாவத் பாரன்ன கச்சதி
உத்தீர்ணேது ஸரித்பாரே
நௌகாயா: கிம் ப்ரயோஜனம்"

அதாவது, "கப்பலேறிச் செல்லும் ஒருவன், எது வரையில் கரையைச் சேரவில்லையோ அதுவரையிலும் கப்பலை விரும்பியவனுருக. அக்கரை சேர்ந்தபின் கப்பலால் யாது பிரயோஜனம் ?" என்னும் உத்தரகீதா வசனப்படி, நாம் முக்தியென்னுங் கரையேறும் பரியந்தம் தேகமென்னுங் கப்பலைத்திடமாக வைத்துக்கொண்டிருந்தால்தான் உபவாசத்தின் பலனுகிய ஜீவப் பிரஹ்மைக்கியஞ் சித்திக்கும்.

அசன பானக்கிரியைகள் சுகத்தைத் தருவனவாகலின், அவை ஜீவப் பிரஹ்மைக்கிய சாதனமாகிய யோகத்திற்குச் சிறிதும் விக்கினமாகா. சமீப வாசமென்னும் உபவாசமொன்றே ஆர்ய சிரேஷ்டர்களால் அநுஷ்டிக்கத் தக்கதாம். மற்ற மனக்கிலேசத்தையும், ரோகத்தையும் உண்டுபண்ணும் பட்டினியாதி கிரியைகள் தள்ளத் தக்கனவாம்.

அப்படியானுல், வைகுண்டஏகாதசி மஹாசிவராத்திரி முதலான உபவாசங்கள் உத்தம மாயிற்றே ; அவற்றை எவ்வாறு விடமுடியும் ? என்ருல்; அவ்வுபவாசங்களுக்குத் தத்துவார்த்த மிதுவாம்:—

### ஏகாதசி உபவாசம்:—

இடைவிடாது (தைலதாரைபோல்) யோகசாதனை செய்துவரும் போது பிரதமத்தில் தசேந்திரியசேஷ்டைகள் ஒடுங்கி மனஞ் சிறிது ககன தாரணை வசப்பட்டு நிற்கும். இதுவே தசமி வ்ரதமாகும். அத்தாரணையில் மனம் அசைவற்று ஒருநாள் (24-மணிநேரம்) நின்ருல் பதினென்ருவது

இந்திரியமாகிய மனதின் சலனம் நீங்கும். இதுவே ஏகாதசி உபவாசமென்று ஆன்றோர் கூறுவர்.

தவிர, விசும்பின் தாரணாநுபவ காலத்தில் வீணை, வேணு, மிருதங்கம், தாளம், பேரி, நாகஸ்வரம், கன்செட், துந்துபி, சமுத்திரம், வண்டுகள், உடுக்கு முதலிய அநேக நாதமுழக்கம் கோசரமாகும். இதுவே ஏகாதசி யன்று இரவும் பகலும் ஈச்வர ஸந்நிதியில் பக்தியுடன் செய்யும் பஜனையாகும்.

மேலும், ஏகாதசி (பதினொன்றாவது) இந்திரியமாகிய மனவொடுக்க வாரம்பத்தில் திறக்கப்பட்டுள்ள நவத்துவாரங்களையுடைய தேகாலயத்தின் மத்தியஸ்தானமாகிய நாபீ ப்ரதேசத்தில் சதா மூடப்பட்டுள்ள அதிரகஸ்யமான ஸுஷும்னுவின் கதவு விசித்திரமாய்த் திறக்கப்படுகின்றது. இதுவே ஸ்வர்க்க (பரமபத) வாசல் திறக்கப்படுவதாம்.

இத்தகைய சிதம்பரானுபவமானது மேற் சொன்னவிதமாய் ஒரு திவசம் பூர்த்தியாய் ஸ்திரமாவதால் பதினொரு இந்திரியங்களும் ['ஏகாதசவிந்திரியாணி' என்று கீதையிலும் கூறப்பட்டிருக்கிறது] தம் நிலையில் ஒடுங்கிச் சேஷ்டையற்றன வாகின்றன.

ததநந்தரம் பன்னிரண்டாவதான (துவாதச) ஆனந்தம் ஜனிக்கிறது. இதுதான் ஜ்யோதி தரிசன மெனப்படுகிறது. இந்த ஜ்யோதி தரிசனம் இடைவிடாது நிகழ்ந்தால் அகண்டாகார விருத்தி யுதயமாகும். இதுவே துவாதசி பாரணையாம்.

மகாசிவராத்திரி விரதமும் இதற்கொருவாறு ஒத்திருப்பதால் ஈண்டு அது விவரிக்கப் படவில்லை.

முன்னொரு காலத்தில் தேவர்கள் தசமியன்று மத்தியானம் ஒருவேளை மாத்திரம் புசித்துப்பிறகு, மந்தரகிரியை மத்தாக்கித் திருப்பாற்கடலை அமுதத்தின் பொருட்டு ஈச்வர பஜனையுடன் கடைந்தார்கள். இவர்கள் தசமியன்றிரவு ஆகாரத்தை நீக்கி, தரையில் சயனித்தார்கள். மறுநாள் ஏகாதசியன்று பகலிரவு ஆகிய இரண்டு வேளையும் ஆகார நித்திராலஸ்யாதிகளை அறவே விட்டு, பகவத்ஸ்மரணையுடன் மதனஞ் செய்தார்கள். துவாதசியன்று சூரியோதயகாலத்தில் அமுதம் வெளிப்பட்டது. அவர்கள் அதிக சந்தோஷத்தால் (ஞான) சூரியதரிசனஞ் செய்தபின் அமுதபாரணைசெய்து ஜராமரண ரஹிதராய்ச் சுகித்திருந்தார்கள். இதை ஜனங்கள் நாளது வரையில் ஒரு பண்டிகையாகக் கொண்டாடி வருகிறார்கள். இது வைகுண்ட ஏகாதசியென வழங்கப்படுகிறது. இப்பண்டிகை பாமரர்களின் பாவனைக்காக பண்டிதர்களால் கற்பிக்கப்பட்டது. மற்றவ்ரதங்களின் தத்துவங்களையும் இவ்வாறே, யுக்தியா லுணர்க.

மேதாவிகள் எப்போதும்—

"த்யான நிர்மதனப்யா சாத்
தேவம் பஸ்யேந் நிகூடவத்" (உத்தரகீதா)

என்ற பகவான் திருவாய் மொழியை அநுசரித்தவர்களாய் மேற்சொன்ன படி தியானமாகிய கடைதலை அப்பியஸித்தலால் மிக ரகஸ்யமாயுள்ள தெய்வத்தை அடைகிறார்கள்.

இவ்வுலகத்தில் பாஹ்யமாகக்காணப்படும் தத்துவசாஸ்திரங்கள் ஸ்வானுபவத்திலிருந்தே வெளியிடப்பட்டன. அத்தத்துவரகஸ்யங்கள் இன்னும் தெளிவாக விளங்கும் பொருட்டு, ஆலயங்களும் உபவாசாதி விரதங்களும் கற்பிக்கப்பட்டன. இவ்வுளவையுள்ளபடி யறிந்தனுஷ்டிப்பவனே முமுக்ஷு—வெனப்படுகிறான்.

ஆகையால், நாம் காயக்கிலேச வியாபாரமாகிய பட்டினிகிடக்குந் தொழிலை யறவே யொழித்து உபவாசத்தின் தத்துவத்தை யுணர்ந்த மகாத்மாக்களை விதிப்படியடைந்து அவருபதேச வுளவின்படி நடந்துவருவோமாயின் நாம் உபவாசபலனாகிய ஜீவன்முக்தி ஸ்திதியை யடைந்து பரமானந்த நித்திரையில் சுகித்திருக்கலாம். ஓம் தத் ஸத்.

V. லக்ஷ்மண ரெட்டி, போர்டு ஸ்கூல்மாஸ்டர்,
வீரபாண்டி, சேலம்.

---

## "மனந்தளர்வுறாமை"

இது மனோதைரியம், அல்லது மனந்தளராமை என்பதாம். இதன் விஷயத்தை விளக்கப்புகுமுன், இது இன்னது என்பதைப்பற்றியும், ஜனங்கள் இதன்பால் கொண்டிருக்கும் தப்பபிப்பிராயங்களைப்பற்றியும் விளக்குதல் இன்றியமையாததாம். பலர் இதை முரட்டுத்தைரியம் எனக் கொள்ளுகின்றனர். அதாவது, இருட்டில் வெகுதூரம் துணையின்றி நடத்தல் முதலியவைபோன்றதாம். இம்மாதிரியான செய்கைகளை முட்டாள்தனமானவை என வாய் கூசாது சொல்லுதலும் பொருந்தும்.

இவ்வுலகில் அஞ்சவேண்டியவைகள் அனேகமிருக்கின்றன. அவைகளுக்கு ஒருவன் அஞ்சியே தீரவேண்டும். இதுபற்றியே தெய்வத்தன்மை வாய்ந்த நம் நாயனாரும்,

"அஞ்சுவதஞ்சாமைபேதைமை" என்று கூறியுள்ளார்.

ஆதலின் மனந்தளர்வுறாமை யென்பது இம்மூட தைரியமன்று.

உண்மையான மனோதிடமாவது இடுக்கண்வந்துற்றகாலத்தில் மனங் கலங்காது, அச்சமயத்திற்குத் தகுந்தவாறு நடத்தலேயாம். பகுத்தறிவு படைத்த மானிடர் பலருள் யாவர்க்கு இச் சமயோசித புத்தியுளதோ அவரை உண்மையான மானிடர் எனச் சொல்லலாகும்.

ஒருவன் எவ்வளவுதான் கல்வி பயின்றிருந்தபோதிலும் ஏதாவது ஆபத்து நேர்ந்தகாலத்தில் இன்னதுதான் செய்வது என்று ஒன்றும் தோன்றாது திகைத்து நிற்பின் அவனது பயிற்சியால் யாது நன்மை விளையும்? ஒருவருக்கு எவ்வளவுதான் இராஜபக்தியும், உண்மையாக உழைக்கும்

சேனாதிபதித்துவமும் இருப்பினும், நன்றாகச் சேனையைச் செலுத்தவேண்டிய காலத்து மனக்கலக்கமுறுவாராயின் இதனால் விளையும் நஷ்டம் அளவிடற்பாலதன்று. தன் குழந்தைக்கு ஆபத்துநேருங்கால் மனோதிடத்தை யிழந்து மூலையில் உட்கார்ந்துகொண்டிருக்கும் தாயினால் அக்குழந்தைக்குத் தீமையே உண்டாகுமென்பது திண்ணம். அவள் மனோதிடத்தைக் கைவிடாதிருப்பின் ஒருசமயம் சிற்சில உபாயங்களின்மூலங் குழந்தையைக் காப்பாற்றவுங்கூடும்.

இத்தகைய மனோதிடம் யாவர்க்கும் இயற்கையிலேயே அமைந்திலது. வெகு சிலருக்குமட்டும் அவரவர்செய்த புண்ணிய கருமங்களின் பயனாக இயற்கையிலே இக்குணம் ஏற்படுகின்றது. இப்பாக்யம் எய்தப்பெற்றோர் தான், ஜனத்தலைவர்கள் போன்ற பொறுப்புவாய்ந்த பதவிக்குத் தகுந்தவராவர்.

'எறும்பூரக் கற்குழியும்' என்றவாறு இயற்கையிலேயே இது அமையப்பெறாதவர்கள் நல்ல பயிற்சியினால் சிறிதளவாகிலும் பெறுதல்கூடும். கீழ்க்கண்ட வழிகள் அதன்பொருட்டுப் பயிலுதற்குரியனவாகும்:—

1. உலகினர் பெரியோராக மதிக்கும் சத்புருஷனுடைய நடையுடை பாவனைகளைக் கவனித்து அன்னோர்கள் அவ்வக்காலங்களில் எவ்வாறு நடக்கின்றனர் என்பதைக் கூடுமானவரை நேரில் பார்த்து அறிந்துகொள்ளுதல்.

2. அவ்வாறு காணமுடியாதாருடைய செயல்களை, அச்செயல்களைப் பற்றி விரிவாக எழுதியுள்ள புத்தகங்களைப் படிப்பதினால் தெரிந்துகொள்ளுதல்.

குறிப்பு:-நந்தமிழில் அவ்விதப் புத்தகங்கள் மிகவும் குறைவாக இருப்பது மிகவும் வருந்தத்தக்கது. இத்தமிழ்நாட்டில் பற்பல மேதாவிகள் தோன்றி மறைந்திருப்பினும், அவர்களைப்பற்றி விரிவான சரிதங்கள் வெளிவந்தில. சில பிரசுரமானபோதிலும், அவற்றுள் பொதுவாக அக்கதாநாயகர்கள் தம் வாழ்நாளைக் கழித்தவிதமும், கல்விபயின்ற விதமும் மேல் நோக்காகச் சொல்லப்பட்டிருக்கின்றனவேயன்றி அவர்களது சமயோசித புத்தியும், மனோதிடங்களை விளக்கும் சம்பவங்கள் பலவும் குறிப்பிடப்படவில்லை. விரிவஞ்சியோ அவைகளை மிகச் சிறிய விஷயங்களென்றோ கருதி ஆசிரியர்கள் விட்டுவிடுகின்றனர். இனியேனும் எவராலாவது இக்குறைகள் பூர்த்தி செய்யப்படின் மிகுந்த நன்மைபயக்கும்.

3. சமயோசிதபுத்தி மனோதிடம் இக்குணங்களுடையாரை நட்பினராகப் பெற்று அவ்வப்போது அன்னாருடன் கலந்துகொள்ளுதல்.

மேற்கண்ட வழிகளுடன் அவரவர்களுக்குத் தோன்றும் ஏனைய சில வழிகளிலும் நடக்க முயன்று, ஒவ்வொருவருக்கும் மிகவும் இன்றியமையாத இம்மனோதிடத்தையும், சமயோசித புத்தியையும் அனைவரும் பெற முயல ஆண்டவன் அருள்புரிவானாக.

N. V. ராமஸ்வாமி, உபாத்தியாயர், துறையூர்.

## பல்லிச் சொல்லுக்குப் பலன்.

ஆனந்த போதினியின் அன்பைநுகரும் அன்பர்காள்! அடியனேற்கு அன்பு கூர்ந்து ஆன்றோ ரருளிய பல்லி சொல்லும் பல னறியும் சில செய்யுட்களை இதனடியில் வரைகின்றேன். அன்பர் பலரும் அவற்றின் பலன்களை உணர்ந்து சௌக்கிய முறும்படி கேட்டுக் கொள்கிறேன்.

எதிர்கால நிகழ்ச்சியை யுணர்ந்துய்யுமாறு பரமனருளிய பலசாஸ்திரங்களுள் பல்லிசாஸ்திரமு மொன்று. அஃது அநுபவத்துக்கு முழுதுமொத்துளது. நமது நாட்டார் எக்காலத்தும் அதனை மிகுதியும் பாராட்டுகின்றனர்.

அதனை விரித்துக் கூறும் பெருநூல்கள் பலவுள. அவற்றை எல்லோரும் மனனஞ் செய்து உபயோகத்திற்குக் கொண்டுவருவது கஷ்டமாயிருக்கிறது. ஆதலின் அவ்வகைச் சிரமமின்றி எவரும் எளிதில் மனப்பாடஞ் செய்து கொள்ளும் பொருட்டுச் சுருங்கச் சொல்லல் என்னும் அழகு கொண்ட இச் செய்யுட்கள் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. இவை அநுபவத்திற்கு மிகவும் ஒத்திருத்தலாலும் இவற்றை மனப்பாடம் செய்வது அரிதன்றாதலாலும் இவை பலர்க்கும் பயன்படு மென்பதில் ஐயமில்லை. பலன் அறிவதற்கு மூர்த்திகரமான கோவில், நல்மனை, பசுமரம் இவைகளில் சொல்லும் கௌளியே உத்தமம். சிலசமயம் இதற்குச் சீக்கிரத்திலும், சிலசமயம் நாள் நீடித்தும் பலன் சித்திக்கும்.

பாட்டுகள்.

கொட்டும் பல்லிக் குரலொன்றும் கூறுமிரண்டும் கனமாகும்
வட்ட மைந்து வானதிகம் வரவே சொல்லு மொருநான்கும்
எட்டு மேழும் பொல்லாதிங் கிசைந்த ஆறு நன்றாகும்
சட்ட முடனே மூன்றானல் சாவுசாருந் தப்பாமல்.

முன்னாவது வலமாவது மொழியின்திரு வளரும்
பின்னாவது இடமாவது பேசுங்குரல் பல்லி
சொன்னாலதை யுமைகேளென அரனார்மொழி குவரால்
பொன்னாவது பொருளாவது உயிராவது போமே.

ஜி. முத்துசாமி அய்யர், ஆற்களூர்,
ஆத்தூர் தாலுக்கா, சேலம்.

---

## ஆரிய சித்தாந்தம்.

(166-ம் பக்கத் தொடர்ச்சி.)

### கர்மமும், ஞானமும்.

சிலர் கர்மமே சிறந்தது என்பர்; சிலர் ஞானமே சிறந்தது என்பர். இவற்றில் நாம் இரண்டையுமே அங்கீகரிக்கின்றோம். கர்மத்தை முக்கியமாகக் கொண்டவர்கள், "கர்மத்தை முறை தவறாமற் செய்வதனால்

ஞானம் தானேயுண்டாகும். அந்த ஞானமே மோட்சத்தைத் தரும்'' என்பர்; ஞானத்தை மேலாகக்கொண்டவர்கள், "கர்மத்தினால் யாதொரு பயனுமில்லை. ஞானமே மோட்சசாதனம். ஆதலால் கர்மத்தை விட்டு ஞானத்தையே ஆசரிக்கவேண்டும்'' என்பர். இந்த விஷயத்தில் நாராயணாவதாரமாகிய கண்ணபிரான் பகவத்கீதையில் அர்ஜுனனுக்கு விரிவாய்க் கூறியிருக்கின்றார். அதை வியாசபகவான் சுலோக ரூபமாகச் செய்து பாரதத்தில் சேர்த்தருளினார். இருவரும் மஹாவிஷ்ணுவின் அம்சமாதலால் இவர்களே நமக்குச் சிறந்த பிரமாண புருஷர்களாவார்கள். இவர்களைத் தவிர வேறு பிரமாண புருஷர்கள் கிடையார்கள்.

இனி அர்ஜுனன் தன் வருண தர்மத்தை விட்டு யுத்தம் செய்யமாட்டேனென்று கூறி யுத்தமுயற்சியைவிட்டுத் துக்கப்பட்டுக்கொண்டிருந்த போது, கண்ணபிரான் அவனை நோக்கி, "ஏ அர்ஜுனா! துக்கத்தை ஒழித்து உன் சுயதர்மமாகிய யுத்தத்தைச் செய். இந்தக் கர்மத்தைச் செய்யாவிட்டால் உனக்கு நற்கதி கிட்டாது. யாதொரு சங்கல்பமுமில்லாமல் தன் குலதர்மமாகிய கர்மத்தைச் செய்கிறவன் பரப்பிரமத்தையே அடைவான். ஆதலின் உன் குலதர்மமாகிய யுத்தத்தைச் செய். கர்மயோகமே சிறந்தது. கர்மபலனை விரும்பாமற் செய்யப்படுகிற எந்தக் கர்மமும் மோட்சத்துக்குக் காரணமாம். ஞானத்துக்கும் காரணமாகும். ஞானமின்றி மோட்சம் கிட்டாது. பரப்பிரமத்தினிடத்தில் மனம் லயித்திருப்பதும், விருப்பும் வெறுப்பும் இல்லாமலிருப்பதும், சுகதுக்கங்களைக் கருதாமலிருப்பதும், எல்லாப் பிராணிகளையும் சமனாகக் கருதுவதும் ஞானமாம். ஆதலால் கருமயோகத்தைச் செய். கர்மயோகமாவது பலாபேட்சையில்லாமல் கர்மங்களைச் செய்து அதைப் பிரம்மார்ப்பணஞ் செய்தலாம்'' என்று கூறியருளினர்.

அர்ஜுனன், "ஞானமே சிறந்ததானால் கொலை செய்வதாகிய இந்தக் கொடிய கர்மத்தைச் செய்யும்படி சொல்வதேன்? இதனால் புத்தி மயங்குகிறது. மோட்சஹேதுவான ஒரே மார்க்கத்தைச் சொல்லும்'' என்றான்.

கண்ணன்—"முற்காலத்தில் இந்தக் கருமயோகம் ஞானயோகமாகிய இரண்டும் என்னாலே சொல்லப்பட்டனவே. கருமத்தை விட்டதனாலே ஒருவன் மோட்சத்தை யடையமாட்டான். மோட்சகாரணமாகிய ஞானத்தைக் கர்மத்தியாகத்தாலே அடைய முடியாது. கருமத்தைச் செய்வதே சிலாக்கியம். விடுவது சிறந்ததாகாது. சுதந்தரமில்லாதவன் ஒருவனும் கருமஞ் செய்யாமலிருப்பதில்லை. நற்கருமமோ துர்க்கருமமோ ஒன்றைச் செய்யாமலிருப்பதில்லை.

பிரமதேவர் ஆதியில் யக்ஞத்தோடு பிரஜைகளைச் சிருஷ்டித்து, அவர்களை நோக்கி "இது உங்களுக்கு இஷ்டபோகங்களைத் தரும். இந்த யக்ஞத்தாலே தெய்வங்களை ஆராதியுங்கள். அந்தத் தேவர்கள் இஷ்டபோகங்களைக் கொடுத்து உங்களை இரட்சிப்பார்கள். இவ்வாறு நீங்கள் ஒருவரை

ஒருவர் அபிவிருத்தி செய்துகொண்டு வாழுங்கள்" என்று சொன்னார். ஆதலால் தேவாராதன ரூபமாகிய கர்மத்தைச் செய்து அவர்களாற் கொடுக்கப்பட்டவைகளை அவர்களுக்கு உதவவேண்டும். அப்படிச் செய்யாதவன் திருடனாவான். தேவாராதனம் செய்து மிகுந்தவற்றைப் புஜிக்கிறவன் சகல பாபங்களினின்றும் விடுபடுவான். தன் குலதர்மத்தை விடாமல் சற்கருமங்களைச் செய்யவேண்டும். முற்காலத்திய பெரியோர்கள் எல்லாரும் கர்மத்தைச் செய்தே மேன்மையை அடைந்தார்கள். கர்மஞ்செய்யவேண்டாத ஞானியும் லோகோபகாரார்த்தமாகக் கர்மங்களைச் செய்யவேண்டும். அங்ஙனம் செய்யாதவன் உலகத்தைக் கெடுத்தவனாவான். பெரியோர் செய்ததையே உலகம் செய்யுமாதலால் உலகத்தாருடைய நன்மைக்காக ஞானிகளும் கர்மத்தைச் செய்யவேண்டும்.

கர்மத்தை விடவேண்டுமென்றது அதன் பலனை விடவேண்டுமென்பதேயாம். அதாவது கர்மத்தைப் பலாபேட்சையின்றிச் செய்து அதன் பலனைப் பிரம்மார்ப்பணஞ் செய்வதேயாம். அங்ஙனமன்றிக் கர்மத்தைச் செய்யாமலே விட்டுவிட வேண்டுமென்பதில்லை. பலாபேட்சையின்றிச் செய்யப்பட்ட இந்தக் கன்மமே ஞானமாம். ஞானஹேதுவாம்.

சிலர் கர்மஞ்செய்யாமல் ஞானியாகவே பிறந்திருப்பார்கள். அவர்கள் முன் ஜன்மங்களில் கர்மங்களைச்செய்து பூர்த்திபெற்றவர்களாதலால் அவர்களுக்குக் கர்மம் வேண்டுவதில்லை. அவர்களைப் பிரமாணமாகக்கொண்டு மற்றவர்கள் கர்மத்தை விடக்கூடாது. விட்டுவிட்டால் பாபத்தை அடைவார்கள். கன்மம் ஞானகாரணமும், ஞானம் மோட்சகாரணமுமாதலால் இரண்டும் அனுஷ்டிக்கத்தக்கனவே. ஒன்றையொன்று அனுசரித்திருப்பதினாலே ஞான நிஷ்டையால் உலகத்தை மறந்திருக்கும்போது கர்மம் செய்யவேண்டுவதில்லை" என்று கூறியருளினர். இவ்வாறு கூறியதனால் கர்மமே மோட்சகாரணமாதலால் அதைச் செய்தே தீரவேண்டுமென்று கண்ணபிரான் தமது அபிப்பிராயத்தைக் கூறினார். இதனால் மனிதர்கள் தத்தம் குலாசாரப்படி கர்மம் செய்யவேண்டுமென்பது விளங்கும்.

ஒரு நகரத்தில், 'அசுவதன்' என்ற பிராமணனும், பிரதத்தன் என்ற அரசகுமாரனும் ஒரே ஆசிரியரிடத்தில் ஓதிக் கலையை யுணர்ந்தார்கள். பிரதத்தன் மகுடாபிஷேகம் செய்யப்பட்டு அரசனானான். அசுவதன் தீர்த்தயாத்திரைபோய்விட்டான். வெகுநாட்கள் சென்றபின் அவ்விருவரும் அகஸ்மாத்தாய் ஓரிடத்தில் சந்தித்தார்கள். அப்போது அவர்களுக்குள் கர்மஞானங்களைப்பற்றி விவாதம் உண்டாயிற்று. அதில் அசுவதன் என்ற பிராமணன் தோல்வி அடைந்து வெட்கமுற்றான்.

அசுவதன் தன் குருவையடைந்து அவர் பாதத்தில் பணிந்து, "சுவாமீ! விவாதத்தில் பிரதத்தன் என்னை ஜயித்துவிட்டான். நான் தோற்றுப் போனேன். அவனைவிட நான் அதிகப் படிப்புள்ளவனல்லவா! அப்படியிருந்தும் அவன் ஜயிப்பானேன்? நான் தோல்வி யடைவானேன்? இதன்

காரணத்தை எனக்கு விளக்கிக் கூறியருளவேண்டுகிறேன்" என்று பிரார்த்தித்தான்.

அதற்குக் குரு, "அப்பா! பிரதத்தன் அரசுரிமைபூண்டு தன் குலதர்மத்தைக் குறைவறச் செய்து வருகின்றான். அதனால் அவனுக்கு மெய்ஞ்ஞான முதயமாயிருப்பதினாலேதான் உன்னை வென்று ஜயங்கொண்டான். நீயோ உன் குலதர்மத்தை அனுஷ்டிக்கவில்லை. பிராமணன் பிரமசாரியாயிருந்தால் அவனுக்குக் குருபணிவிடை செய்வதே முக்கிய தர்மம். இல்லாவிட்டால் கிரகஸ்தாச்சிரமத்தை யடைந்து அதற்குரிய தர்மங்களைக் குறைவறச் செய்யவேண்டும். அவ்வாசிரமத்தில் பிரியமில்லாவிட்டால் சந்நியாசத்தையடைந்து அவ்வாசிரம தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும். அன்றேல் வானப்பிரஸ்தாச்சிரமத்தை அடைந்து அந்தத் தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும். நீயோ உன் குல தர்மத்தில் ஒன்றையாவது அனுசரியாமல் காலத்தைக் கழித்துவிட்டாய். அதனால் உனக்கு ஞானம் பிறக்கவில்லை. ஞானமில்லாதவன் எந்தக் காரியத்தையும் சாதிக்கமாட்டான். ஆதலால் நீ கிரகஸ்தாச்சிரமத்தை அடைந்து அக்கினிஹோத்திராதி நித்திய கர்மங்களைச் செய்" என்று சொன்னார்.

அசுவதன் அப்படியே கிரகஸ்த தர்மத்தை அனுஷ்டித்துப், பிறகு பிரதத்தனைக் காணச்சென்றான். அவன் வருவதைத் தன் ஞானதிருஷ்டியால் உணர்ந்த அரசன் அர்க்கியபாத்யாதிகளால் அவனை உபசரித்துப் பூஜித்து,

"பகவானே! இப்போது குலாசார தர்மத்தை அனுசரித்து வருகிற நீர் எனக்குக் குருவாகத் தக்கவர். ஆதலால் குருவாக இருந்து என்னையும் இந்த இராஜ்யத்தையும் காப்பாற்றும்" என்று கூறி அவனுக்கு அநேக வெகுமதிகள் செய்து அவனைத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டான். அவனும் மனங்களித்தான். குலதர்மமாகிய கர்மத்தைச் சரிவர நியமத்தோடு செய்கிறவன் இம்மை மறுமையாகிய இரு பலன்களையும் பெறுவான்.

கர்மமும், ஞானமும் முற்றுப்பெற்றன.

**சிவானந்தசாகர யோகீஸ்வரர்.**

---

## பேறு.

பெரியார் பெறுவனவற்றைப் பேறென்ப. பெறுவனதாம் நன்மக்கள், பொன், புகழ் முதலாகப் பதினாறுமென அறிவுடையார் அருளிய நூல்கள் கூறும். அப்பதினாறனுள்ளும் ஒவ்வொன்றும் தன்றன் தன்மையால் மேம்பாடுடைய தெனினும் ஒரொன்று ஏனையவற்றினும் சிறந்ததாகும். சிறப்பினது, இது எனக் காட்டு முகத்தானே, இப்பொருள் இத்தன்மைத்தெனத் தம்மறிவான் உணர்ந்து உரைப்பவர் அறிவுடைய மக்களே யாவாராதலின் அவர் தம் சிறப்புக் கூறவே சிறந்த பேறுவது மக்கட்பேறு என்பது துணிய இக்கட்டுரை எழுந்ததாகும்.

உயர்திணை, அஃறிணை யென நூலோர் பகுத்த விரு திணையுள்ளும் நல்லறிவு, நல்லொழுக்கம் என்ற இவற்றாற் சிறந்து தமக்கும் பிறர்க்கும் பயனுண்டாக இசையுடன் வாழ்பவராய (இலக்கண முடையார் உயர்திணைப் பாற் படுத்துக் கூறும்) மக்களே சிறந்தவராவர்.

மக்கள் சிறத்தற் காரணங்களுள்ளும் ஒன்றாய அறிவாவது பொருள்களின் இயல்பு இது வென நிச்சயிக்கும் புலமையாம். இவ்வறிவு கல்வியின் பயனாய்க் கற்கும் அளவிற்குத்தகப் பெருகுந்தன்மையினதாம். இது இத்தன்மைத்தாதல் "மாந்தர்க்குக் கற்றனைத்தூறும் அறிவு" (குறள்-கல்வி 6.) என்றதாற் றெளிவாம்.

ஒழுக்கமாவது ஆன்றோர் ஆக்கிய நூல்கள் செய்தக்கன இன்ன தகாதன இன்ன எனவிளங்க உணர்த்துவன வாதலின், அவைதம்மை முறையிற் கற்றுப் பின் கற்ற வழியில் நிற்றலாம். இது "கற்றபின் நிற்க வதற்குத் தக" (குறள்-கல்வி-1) என்ற நந்தமிழ்மறையானே பெறப்படும்.

இங்குக் கூறிய இறுதிவாராமற்காப்பதாய்ப், பிறரால் அழிக்கப்படாததாய், நன்மை தீமைகளை யறிந்து தீயதனின்று நீக்கி நல்லதன்கட் செலுத்துவதாய அறிவினையும், எல்லாருக்கும் சிறப்பினைத் தருவதாய், இன்பம் பயப்பதாய ஒழுக்கத்தினையு முடையாரன்றே வாழ்க்கைக்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய பொருளை நன்னெறியின் ஈட்டியும், காத்தும், வகுத்தும் இல்வாழ்க்கைக்கு உரிய இயல்போடும் கூடி, அன்பும் அறனுமுடையராய்ப் பயனுடைச் செய்கைகளைச் செய்பவராவர். அவர் செய்யத்தக்க பயனுடைச் செய்கைகளாவன, ஏற்றபெற்றியில் உணவு கொடுத்தல், கல்விக்கழகம் நிறுவுதல், பல் தொழிற்பயிற்சிப்பள்ளிகள் பலவமைத்தல், அறனறி ஆலயமமைத்தல், மருத்துமன்றம் நாட்டல் முதலியனவாம். இவையே யன்றித் தாய் மொழியினை வளர்த்தல், நிகழ்ச்சி அறிக்கை (வர்த்தமான பத்திரிகை) களை வெளியிடுதல், நாட்டிற் கூழியம் செய்தல் முதலியனவும் யாவரும் புகழத்தக்க முறையிற் செய்யத்தக்க பயன் தரு செய்கைகளாம்.

இனி, உணவு கொடுத்தல் தொடங்கி ஒவ்வொன்றனையும்பற்றிச் சொல்லிச் செல்லுவதாயின் கட்டுரை விரியுமாதலின் அவற்றினை விடுத்து, மொழியினை வளர்த்தல் தொடங்கிச் சிறிது கூறுங்கால் மொழியினை வளர்த்தல்தான் ஒருவர் தம் தாய் மொழியினை நாடெங்கும் பரவச் செய்தலாம். ஒரு நாட்டின் பெருமையும், மக்களின் அறிவொழுக்கங்களும் பிறவும் அந்நாட்டு வழங்கும் நூல்களானே அறியக்கிடப்பனவாம். இவை பண்டைப் பெரும்புலவர் தமக்கு இயல்பினமைந்த பேரருளான் எழுதிப் போந்த நூல்கள், தம்மை ஆய்ந்து பயிலுவார்க்கு, நாட்டின்வளம் முன்னோரின் பெருமை, செங்கோ லோச்சிய மன்னர்தம் பீடுடைமை முதலியவற்றை எளிதின் விளங்க உணர்த்துமாற்றான் அறியப்படும். மற்றும் அந்நூல்கள், தம்மை ஊக்கமுடன் உழைத்துப் படிப்பார்க்கு

அளவில் அறிவினையும் பெருமையினையும் அளிக்கும் இயல்பின வென்பதை எவரே மறுக்க வல்லார்? சிலரே அவற்றின் இயல்புணர்ந்து முன்னைய நூல்களுள் மறைந்தொழிந்தன போக எஞ்சியவற்றைப் புகழ்வார் புகழும் புகழ்ச்சிக் கெல்லாம் இடனாகப் பல இடையூறுகளையும் பொருட்படுத்தாமல் பதித்தும், பதிப்பித்தும், உலகுக்கு உபகரித்தும், அவற்றை இக் காலத்தேயன்றி எதிர்காலத்தும் ஆராய்ச்சி செய்யுமவர், தாம் காணும் முறையே முறையாகக் கொள்ள ஆராய்ச்சி செய்வதிலேயே பொழுதினைப் போக்கியும், உரையின்றிக் கிடந்த பெருநூல்களுக்கு என்றும் ஒல்காப் பெரும்புகழ் சுரக்கும் உரைவகுத்தும் தமிழ்மொழிவளர்ச்சியைப் பெருக்குபவராய்த் தம் நாள் பயனுடைய நாளாகச் செய்துவருகின்றனர். ஏனையரோ வெனின் தம்மைத் தற்காலத்து நாகரிகம் பெற்றவரென மதித்துச் செருக்காம் போர்வை போர்த்து அவை பயக்கும் பயனை இழப்பவரா யுழலுவர். அன்றியும், இவர் நூற்களின் எழுச்சியினைத் தாம் அறியாதவர் என்பதனையும் மறந்து முற்றுமறிந்தவராக வீறுபேசி அவற்றை இழிவுபடுத்தவும் தொடங்குகின்றனர். அறிஞர் இன்னோர் பேதைமைக்கு இரங்குவதன்றி எண்ணுவதொன்றுண்டோ! அவ்வறிஞர் ஒருகால் அப்பேதையரைத் திருத்த முயன்றாலும் அவர்தம்மால் இகழப்பட்டு 'அவர் தன்மையறியாது அறிவுறுத்தியது நமது பேதைமையன்றோ' என்று தம்மைத்தாமே நொந்து கொள்ளும் நிலைமையை யடைகின்றனர். உலகம் உழல உழலும் இப்பேதையர் ஏனையோர் இயல்போடு தம் இயல்பினை, நடுநிலைமையினின்று ஆராய்வாராயின் தம் செருக்கினை யொழித்து மொழிவளர்ச்சிக் குரியவற்றைச் செய்தலில் ஊக்கங் கொண்டு உழைப்பவராவர் என்பது சொல்லலும் வேண்டுமோ?

அடுத்து, நிகழ்ச்சியறிக்கைகளை வெளியிடுதல்பற்றிப் பேசுமிடத்து அவைதாம் நூல்கள் போன்று மக்களுக்கு அறிவொழுக்கங்களைப் பயப்பனவாதலோடு பிறவழிகளாலும் உலகுக்கு உறுதி பயப்பனவாம்.

நூல்கள் தாம்கூறி முடிக்கவந்த பொருள் நோக்கத்துடனே அப்பொருளினை விளங்கச் சொல்லுங்கால் ஓரிடத்துச் சிறிது விரியவும், பிறிதோரிடத்துச் சுருங்கவும் உரையாநிற்கும். நிகழ்ச்சி அறிக்கைகளோ வெனின் உலகின் பலவிடத்து நிகழ்ச்சிகளையும் கூடிய விரைவில் விரிவாக வுரைப்பனவாம். அன்றியும், அவை, நூல்கள் சம்பந்தமான ஆராய்ச்சிக் குறிப்புக்களையும், ஆய்ந்தார்தம் கொள்கைகளினையும் தெளியச்செய்வனவாம். இத்தகைய நிகழ்ச்சி அறிக்கை வெளியீடுகள் உலகமெங்கும் பரவிப் பெரும்பயன் தருவனவாக விருத்தலின் அவையிற்றை வெளியிடுமவர் உலகிற்குப் பயன்படுமவற்றைச் செய்பவராவர் என்பது விளக்கமன்றோ. நிற்க:—

நம் நாட்டில் ஏனைய நாடுகளைப் போன்று மிகுதியும் நிகழ்ச்சி யறிக்கை வெளியீடுகள் பெருகவில்லை. எனினும் இங்குமங்குமாகச் 'சுதேச மித்திரன்' போன்ற சில நாள்வெளியீடுகளும், 'தமிழ்நாடு' ஒத்த சில வாரவெளியீடுகளும், 'ஆனந்தபோதினி' போன்ற சில மாத வெளியீடுகளும் மக்களுக்குப்

பயனளித்து வருவனவாம். இவை யொத்த பலவெளியீடுகளை வெளியிடு மவர் சிறந்த மக்களாவார் என்பதனை உலகம் ஒப்பாதொழியுமோ?

இனி, முடிவாகக் கூறுமிடத்து நாட்டிற் கூழியஞ் செய்தலும் பயனுடைச் செய்கையாம். ஒருவன், தன்னுயிரை யிழத்தலான் பிறர் நலங்களைக் காக்கக்கூடுமாயின் தன்னுயிரையும் ஈத்துப் பிறர் வாழக்கொள்ளும் உள்ளத்தின் ஊக்கமே நாட்டிற் கூழியஞ்செய்தற்குச் சிறந்த குணமாம். இக்குணத்தினை இயற்கையாகப் பெற்ற நம் தமிழ்மக்கள் பல்லாயிரவர் நம் நாட்டில் வசை யொழித்து இசையினைநாட்டி வாழ்ந்தவராதல் பண்டை நூல்களை உய்த்துணர்வார்க்குக் குன்றின்மேலிட்ட விளக்கெனத் தோன்றுதல் ஒருதலை. மனிதர், பிணியானும் பிறவழியானும் வாளா யாதொரு பயனுமின்றி மாய்தலின் என்றும் இறந்துபடல் முடிந்ததாகலின், நாட்டிற்கூழியஞ்செய்தல்பற்றி உயிர் நீத்தார் இவரென உயர்ந்தார் வாய்ப்படூஉம் பெருஞ்சுட்டிற்கிலக்காகிப் பிறரும் தம் நெறியிற் செல்லச் செல்லும் சிறப்புடைய மக்களையே மெய்யூழியரென உலகம் போற்றுநிற்கும். ஆதலின் நாட்டிற்கூழியஞ் செய்தலை முன்னிட்டுச் செய்வன யாவும் பேறுகளுள் சிறந்தது மக்கட் பேறுமென்பதனைத் தெளிவிக்கும்.

இனி, மொழிந்தது கொண்டு முடிபு துணிவுழி ஆன்றவறிவுடையராய் நன்னெறியினின்று ஈட்டியதனைப் பகுத்துண்டு பல்லுயிரோம்பி மக்கள் அறிவுடையராதற் கேற்றனசெய்து, இறுதிபயப்பினும் உறுதிபயப்பன இயற்றி, ஒழிந்த பேறுகளையெல்லாம் பெற்று வாழும் திறமையுடையார் மக்களே யாவாராதலின் பேறுகளனைத்தினும் சிறந்ததாவது மக்கட்பேறே என்பது துணிபாம்.

இது, "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்ற தேவர் வாக்கானுந் தெளிவாம்.

N. திருவேங்கடத்தையங்கார், தமிழ்ப்பண்டிதர்,
C. R. C. High Scool, Purasawalkam.

---

## அர்ச்சுனன் சபதம்.

உண்மை உணர் அறிவினர்காள்!

சென்ற புரட்டாசித் திங்களில் வெளியான ஆனந்தபோதினியில் "ஓர் சந்தேகவினா" என்று தலையங்கமிட்டு வெளிவந்த விடயத்தையும் அதற்குப் பத்திராதிபர் எழுதிய குறிப்பினையும் நண்பர்கள் கண்ணுற்றிருப்பார்கள். அதில் அர்ச்சுனன், தன் மகன் அபிமன்யு இறந்த துக்கம் பொறாது பெரிதும் வருந்திப் பின்னர், அடுத்தநாள் பகல் முடியுமுன் சிந்து பூபதியாகிய சயத்திரதனை எதிர்த்து அவன் ஆவி கவராவிடின் தான் வெந்தழலில் வீழ்வதாகச் சபதம் செய்கின்றவிடத்து,

"மனைவியுயிர் வியாகன் மகன்மனைவி கையால்
தினையளவு யோபொழுது சீவித்தவ னாவேன்" என்று

அவன் கூறுகின்றதாகக் குறிக்கிற செய்யுளில் ஐயம் ஏற்படுகின்றது. இச்செய்யுளை யோதுவார் ஒவ்வொருவருக்கும் இவ்வையம் எழுவது சகஜமே. ஆனால் இவ்விதம் அர்ச்சுனன் கூறுவதாகக் குறிப்பது பொருந்துமா? இச் செய்யுளுக்கு முந்திய செய்யுட்களில் பின்வருமாறு,

"மன்றிலொரு சார்புற வழக்கற உரைக்கும்
புன்றொழிலர் வீழ்நரகு புக்குழலு வேனே" என்றும்,

"தாதையுட னேமொழிதகாதன பிதற்றும்
பேதைமக னெய்துநெறி பெற்றுடைய னாவேன்" என்றும்,

"தாயர்பசி கண்டுநனி தன்பசி தணிக்கும்
நாயனைய புல்லருறு நரகிலுறு வேனே" என்றும்,

"தஞ்சென நினைந்தவர் தமக்கிடர் நினைக்கும்
நஞ்சனைய பாதகர் நடக்குநெறி சேர்வேன்" என்றும்

அவன் செய்கின்ற சபதங்கள் யாவும் எவரும் ஒப்பத்தக்கவையே. இவ்விதமெல்லாம் சபதம்கூறிய அர்ச்சுனன் பின்னர் உலக இயலுக்கு மாறிச் சபதம் செய்வானேன்? அன்றி ஆசிரியர் அவ்விதம் குறிப்பானேன்? அன்றிப் பாடம் அவ்விதம் நேர்ந்ததேன்?

இந்தப்பாடம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் பதிப்பில்மட்டுமேயிருக்கிறது. யாம் காணப்பெற்ற இதர ஏட்டுப்பிரதிகளிலெல்லாம்,

"மனைவியய லான்மருவல் கண்டுமவள் கையால்
இனையளவு மோர்பொழுது சீவித்தவ னாவேன்"

என்ற பாடமே காணப்படுகின்றது. இன்னுஞ் சில ஏடுகளில் இப்பாட்டை முழுவதுமே விடப்பட்டிருப்பதாகவுங் கேள்வி.

ஆதலால், பல ஏட்டுப் பிரதியிலும் காணப்படுகின்ற

"மனைவியய லான்மருவல் கண்டுமவள் கையால்
இனையளவு மோர்பொழுது சீவித்தவ னாவேன்"

என்ற பாடமே ஏற்றமுடைத்தென்பதற்கு, நம் மூதாட்டியாம் ஔவை கூறுகின்ற ஒரு பாவை எடுத்துக் காட்டுதும்.

"கொடிது கொடிது வறுமை கொடிது
*   *   *   *
அதனினும் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனினும் கொடிது
இன்புற அவர்கையில் உண்பதுதானே"

என்ற பாடலே நம் வீரனான அர்ச்சுனன் கருத்தைத் தெற்றென விளக்கும்.

இக்காரணத்தால் "மனைவியயலான் மருவல்கண்டு மவள்கையால்" என்ற பாடமே சரியெனத் தோன்றுகின்றது.

தொ. மு. பாஸ்கரன், "சித்திராலயம்"
திருநெல்வேலி.

குறிப்பு:—இக்கேள்விக்குப் பலர் வேறு விதங்களாகவும் விடைகள் எழுதியிருக்கின்றனர். அவ்வெல்லோருடைய பெயரையும் அவர்கள் விடையுடன் பிரசுரிக்க இடமில்லை. அவற்றுள் ஒவ்வொருவரும், ஒருவன் தன் மனைவியிருக்க அவன் மனம்நொந்து உயிர் துறக்கத்தக்க துன்பத்தை யவளுக்குச் செய்துகொண்டு மருமகள் கையால் உண்பது தவறென்றும், அரசன் தன் மனைவி யிறந்தபின்பு மகனுக்கு முடிசூட்டிவிட்டுத் துறவடையாமல் வீட்டிலிருந்துகொண்டு மருமகளிடம் சாப்பிட்டுவருதல் பிசகு என்றும், மனைவி யிறந்தபின் மருமகளிருக்குமிடத்திலிருந்து அவளாலுபசரிக்கப் பட்டு வந்தால் அவளைக் கற்பழிக்க ஏது உண்டாகுமென்றும், அதனால் 'மனைவி யுயிர்வீய நன்மகன் மனைவி கையால், தினையளவு மோர்பொழுது சீவித்தவனாவேன்' என்ற பாடமே சரியானதென்றும் பற்பல விதமாகத் தமக்குத் தோன்றிய கருத்துக்களை வெளியிட்டிருக்கின்றனர்.

இந்த அபிப்பிராயங்கள் ஒருவகையில் பொருத்தமுடையவை எனினும், மனைவி சாகுமாறு அவளைத் துன்புறுத்தி மருமகளோடுறவாயிருத்தலும், மனைவி யிறந்தபின் துறவடைதலும், மருமகளைக் கற்பழித்தலும் எல்லோரிடத்துமே நிகழ்வனவல்ல. அறிவில்லாதவரே மனைவி யிருக்கும்போது அவளைத் துன்புறுத்தி மருமகளோடுறவு செய்வர்; தூர்த்தரே மனைவி யிறந்தபின் மருமகளைக் கற்பழிக்கத் துணிவர்; தீவிர ஞானமுடையவரே மனைவி யிறந்தபின் துறவடைவர். மற்றவர் இல்லத்திலேயே யிருப்பர். அங்ஙனமிருப்ப, மனைவி யிறந்தபின் ஒவ்வொருவர்க்கும் துறவு அவசியமென விளக்கியும், சில தூர்த்தர் நடக்கையைக் குறித்து எல்லோரும் மருமகளைக் கற்பழித்துவிடுவோர்களென்பதை விளக்கியும் நீதி கூறுவது இல்லற தருமசாஸ்திரத்திற்கு முரணாகும்.

மருமகளாயிருப்பவள் வயதுதளர்ந்த மாமன் மாமிகளைத் தந்தை தாயாரைப்போல எண்ணி உபசரிக்கவேண்டுமென்பதும், அவர்கள் அவளைப் புத்திரியைப்போல் பாதுகாக்கவேண்டுமென்பதும் தரும சாஸ்திரங்களின் துணிபு. அங்ஙனமிருப்ப, இத்தகைய விஷயங்களை உள்ளடக்கி மருமகளிடம் உணவுண்ணல் இழிவெனக்காட்டி ஒரு க்ஷத்திரிய வீரன் சபதங் கூறுதல் பொருத்தமாகாது.

"மனைவி யயலான் மருவல் கண்டு மவள்கையால்
தினையளவும் ஓர்பொழுது சீவித்தவனாவேன்"

என்று சபதங் கூறுவதே தகுதியானதெனத் தெரிகிறது. அபிப்பிராய பேதங்கள் பலவிதமாக வெளிவருவது இயற்கை. அவற்றுள் பொருத்தமானவற்றைக் கொள்வதே அறிவுடைமையாம். ஒரு நண்பர் சந்தேகங் கேட்டதால் இவ்வினாவையும் விடைகளையும் வெளியிட்டோம். இதனால் வினாவிய நண்பர் சந்தேகந் தெளிந்துகொள்வாராக. இவ்விஷயம் இத்துடன் முடிவுபெறும். இனி இதைப்பற்றி அதிகமாக வேறொன்றும் பிரசுரிக்கப் பத்திரிகையில் இடமில்லை.

பா-ர்.

# ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(160-ம் பக்கத் தொடர்ச்சி.)

## "இடம்பட வீடெடேல்."

"இடம்பட=(வசிக்கும் இட அளவிற்கு மிஞ்சி) வெற்றிடமுண்டாக, (அதாவது காலி இடம் அதிகமாகக் கிடக்கும்படி), வீடு=(குடியிருக்கும்) வீட்டை, எடேல்=கட்டாதே" என்பது இதன் பொருளாம்.

மனிதன், தானும், தன்னைச் சார்ந்தவர்களும் வாசம் செய்வதற்கு எவ்வளவு இடம் அவசியமோ அவ்வளவே இடமிருக்கும்படி வீட்டைக் கட்டிக்கொள்ளவேண்டும். அங்ஙனம் கட்டப்படும் வீட்டில் வெற்றிடமில்லாமல் எங்கும் எப்பொழுதும் ஜனசஞ்சாரமிருந்துகொண்டே யிருக்கும். எந்த இடமும் குப்பை முதலியன இன்றிச் சுத்தமாகவே யிருக்கும்; இராக்காலத்தில், ஜனங்கள், தங்களுடைய சௌகரியத்தை உத்தேசித்து ஏற்றும் விளக்குகள் எரிந்துகொண்டிருப்பதால் பிரகாசம் பரவியிருக்கும். அதனால், அவ்வீட்டில் எக்காலத்தும் இலக்ஷ்மீகரம் விளங்கிக்கொண்டிருக்கும். அவ்வீட்டில் வசிப்போர் மிக்க செல்வவந்தரா யில்லாவிடினும் ஐசுவரியமுடையவர்களைப்போலவே விளங்குவார்கள். இதுபற்றியே நம் மூதாட்டி கூறிய, "சிறுகக்கட்டிப் பெருகவாழ்" என்னும் மற்றொரு முதுமொழியும் வழங்குகின்றது.

இங்ஙனமின்றி, மனிதர் சஞ்சரிப்பின் அளவுக்கு மிஞ்சி வெற்றிடங் கிடக்கும்படி வீட்டைக் கட்டினால் அதிற் சிறுபாகத்திலேயே மனிதர் சஞ்சரிப்பார்கள். பெரும்பாகம் மனிதசஞ்சாரமின்றியே யிருக்கும். மிகுந்த தனவந்தர்களும்கூட உபயோகமற்ற விடத்தில் கவனஞ்செலுத்தமாட்டார்கள்; பெரும்பான்மையும் அவ்விடத்தைப் பார்க்கவேமாட்டார்கள். அதனால் அவ்விடம் அசுத்தமாயும், வெளிச்சமின்றியும், விஷஜந்துக்கள் சஞ்சரிக்கும் ஸ்தானமாயும், வௌவாலும், எலியும், பூனையும் மறைந்து தங்கும் இரகசிய ஸ்தானமாயும், திருடர் மறைவதற்குபயோகமாயும், நிஷேதப் பொருள்களைக் குவிக்கும் ஒதுக்கிடமாயும், வேறு பற்பல அருவருப்புக்களைத் தருவதாயும் மாறிவிடும். அவ்வாறு கெட்ட விடத்தின் சாயை மற்ற விடத்திலும் படிவதால் பொதுவாக அந்த வீடு முழுவதுமே பொலிவிழந்ததாகிவிடும். அங்ஙனமாகவே அவ்வீட்டில் வாழ்வார்க்கும் செல்வாக்கானது குறைய ஆரம்பித்துவிடும். ஒருசமயம் அவ்வீட்டுக்காரர் அந்தக் காலியிடத்தைச் சுத்தமாகவைத்துவரச் சிரத்தை யெடுத்துக்கொண்டாலும், அதனைப் பெருக்கி மெழுகிச் சுத்தஞ்செய்ய வேலையாட்கள் அதிகமாக வேண்டியிருப்பதாலும், அவர்களுக்குக் கொடுக்கும் சம்பளச் செலவு அதிகரிப்பதாலும்,எங்கும் வெளிச்சமுண்டாவதற்குப் பற்பல விளக்குகள் ஏற்றவேண்டியிருப்பதாலும், அவ்விளக்குகளுக்கு எண்ணெய் வாங்கும் செலவு அதிகரிப்பதாலும் சில தினங்கள்வரை அக்காரியத்தை நடத்திப் பார்த்துப் பின்னர்க் கைநழுவ விட்டுவிடுவார்கள்; பிடிவாதத்தோடு அதனை விடாமற் செய்துவரினும் வீணாகப் பொருள் நஷ்டமுண்டாகி, அந்நஷ்டத்

தால் அன்னோர் இன்னலடைவார்கள். இடம்பமாக இடம்பட வீட்டைக் கட்டுவோர் பலர் இத்தகைய நிலைமையடைவதை நாம் எக்காலத்திலும் பிரத்தியக்ஷமாகக் காணலாம். இதற்குதாரணமாக ஒரு சிறு கதை கூறுவாம்:—

ஒரு கிராமத்தில் தனவந்தரொருவரிருந்தார். ஆனால் இவர், பணமொன்றும் தேடவில்லை. இவரிடமிருந்த செல்வமெல்லாம் இவருடைய தந்தையால் தேடிவைக்கப்பட்டதே. அதனால் இவர் பணத்தின் அருமையை உணரமாட்டார். 'பொருள்தனைப் போற்றிவாழ்' என்ற முதுமொழியையும் இவர் அனுசரித்து நடப்பதில்லை; பொருளை இடம்பமான காரியங்களிலும், பயனற்ற விஷயங்களிலுமே செலவிட்டு வீண் பெருமையை யடைவார். இவர் உணவிட்டு உண்ட இலையை, வெளியில் வேலைக்காரர்கள் எடுத்துப்போட்டால் அதில் இரண்டு இலட்டு மீதியாகக் கிடக்கும்; உயர்ந்த விலையுள்ள மற்ற உணவு வகைகளும் மிஞ்சிக் கிடக்கும்; இவர், "ஏன் இவ்வளவு விலைமதிப்புள்ள உணவுவகைகளை வீதியில் எறிந்து வீணாக்கவேண்டும்; நமக்கு அவற்றில் எவ்வளவு வேண்டுமோ அவ்வளவை மட்டும் வைத்து நாம் சாப்பிடலாமே" என்று சிறிதும் சிந்திக்கமாட்டார். இவ்வாறு இவர் இந்தப் பயனற்ற காரியத்தைச் செய்வதோடு, "எச்சில் இலையில் இரண்டு இலட்டாவது வீதியில் விழும்படி செய்யாத பணக்காரரும் ஒரு பிரபு ஆவரா" என்று இந்தப் பேதைச் செய்கையைப்பற்றிப் பெருமையும் பேசிக்கொள்வார். இப்படியே இவர் பற்பல காரியங்களையும் செய்துவருவார். அவற்றுள் உதாரணமாக இஃதொன்றுமட்டும் இங்கு விளக்கப்பட்டது.

இந்தப் பெருமைக்காரர் இங்ஙனம் இடம்ப புருஷராய் வாழ்ந்துவருங் காலத்தில், இவருடைய தந்தையார் தமது குடும்ப அளவிற்குத் தகுதியாகக் கட்டியிருந்த வீடு, பார்வைக்குத் தம் பெருமையை விளக்கக்கூடியதாயில்லை யென்று நினைத்து, அதனை யிடித்துவிட்டுச் சுமார் ஐந்நூறு மனிதர்கள் வசிக்கத்தக்கதான ஒரு பெரிய வீட்டைக் கட்டினார். அதில், இவரும் இவருடைய மனைவியும், இரண்டு மூன்று வேலைக்காரருமே வாசஞ் செய்துவந்தார்கள். இவர்களுக்கு முன்பகுதியிற் கொஞ்சம் இடமே போதுமானதாயிருந்தது. எஞ்சிய இடமுழுதும் வீணாய்க்கிடந்தது. எனினும், அந்தப் பிரபு அதிகப் பணச்செலவுசெய்து, மேலும் சில வேலைக்காரர்களை நியமித்துத் தினந்தோறும் காலியிடத்தைச் சுத்தப்படுத்தச்செய்தும், ஆங்காங்கே விளக்கேற்றச்செய்தும் நல்ல நிலையில் பாதுகாத்து வந்தார். இவ்வகையில் அவருக்கு அனாவசியச்செலவு அதிகமாயிற்று; இதனோடு அவருடைய வேறு இடம்பமான காரியங்களிலும் பணச்செலவு மிகுந்துவிட்டது. இவ்வகைச் செலவுகளால் சில வருடங்களுக்குள் அவருடைய செல்வம் குறைந்துவிட்டது. அங்ஙனம் ஐசுவரியம் குறையவே அவர் தம்மிடமிருந்த வேலைக்காரர்களை நிறுத்திவிட்டதோடு தம் வீட்டின் காலியிடத்தைச் சுத்தஞ்செய்வதையும் விட்டுவிட்டார்.

அதன்மேல் சில மாதங்களுக்குள் அவர் வீட்டின் பின்பக்கத்திலிருந்த அறைகளில் குப்பைகள் நிறைந்துவிட்டன; செடிகள் முளைத்துவிட்டன; சுவர்கள் ஆங்காங்கே இடிந்து வீழ்ந்துபோயின; துஷ்டஜந்துக்கள் குடியேறின. அவ்வீடிருந்த இடத்திற்குச் சமீபத்தில் காடொன்றிருந்தபடியால் அதிலிருந்த மலைப்பாம்பொன்று இராக்காலத்தில் இரைதேடச் சென்று, அகப்பட்ட ஜந்துக்களைப் பிடித்துத் தின்றுவிட்டு மேற்கூறிய வீட்டின் அறைகளில் ஒன்றில் சுவர் இடிந்து வழியுண்டாகி யிருந்தபடியாலும், அதன் மத்தியில் செடிகள் அடர்ந்திருந்தனவாதலாலும், அதற்குள் நுழைந்து படுத்திருந்தது. மறுநாள் அதப் பிரபு ஏதோ ஒரு காரியமாக அந்த அறையின் பக்கத்தில் சென்றார். அதில் செடிகள் நிறைந்திருப்பதைப் பார்த்தவுடன் அவருக்குச் சிறிது மனக்கவலை உண்டாயிற்று. அதனால் அவர், அந்தச் செடிகளைப் பிடுங்கி யெறியத்தொடங்கினார். அப்போது அங்கே பெரிய உலக்கைபோல் படுத்திருந்த மலைப்பாம்பைப் பார்த்து உலக்கை யென்றே நினைத்து, 'இஃதேது இங்கோர் உலக்கை கிடக்கிறதே!' என்று அதனைக் கையால் தொட்டார். உடனே அந்தப் பெரும்பாம்பு, புலிபோற் சீறித் தன் வாலால் அவருடைய காலில் ஓர் அடி அடித்துவிட்டு வேகமாக வெளியிற் பாய்ந்தோடிற்று. பிரபு, பயத்தினால் நெஞ்சந் திடுக்கிட்டுக் கீழே வீழ்ந்து புரண்டெழுந்து, "அந்தோ! நம் வீடு மலைப்பாம்புக்கு வாசஸ்தானமாயிற்றே; இன்னும் சிறிதுகாலம்வரை இதைக் கவனிக்காமலிருந்தால் இங்கே பற்பல துஷ்டப்பிராணிகள் கூடி நமக்கே ஆபத்தை உண்டாக்கிவிடுதல்கூடும்" என்று அப்போதே சில கூலிக்காரரை ஏவி வீணாகக்கிடந்த அறைகளையெல்லாம் இடித்துத் தள்ளச் செய்துவிட்டுச் சில தினங்களில் தமது குடும்பவாழ்க்கைக்கு வேண்டிய அளவில் ஒரு சிறு வீட்டைக் கட்டிக்கொண்டு சுகமாக வாழ்ந்தார்.

(தொடரும்) செம்பூர்-வீ. ஆறுமுகஞ்சேர்வை.

---

## பகற் கொள்ளையும், படுமோசமும் என்ற நிருபருக்கு மறுப்பு.

நம் "ஆனந்தபோதினி" வாசகர்களுக்கோர் விஞ்ஞாபனம்!

சென்ற ஐப்பசிமீ வெளிவந்த நம் "ஆனந்தபோதினி" 167-ம் பக்கத்தில் "பகற்கொள்ளையும், படுமோசமும்" என்ற தலையங்கத்துடன் கா. க. தனபாலன் என்று கையொப்பமிட்டுப் பிரசுரித்திருக்கும் வியாசத்தை, நம் "ஆனந்தபோதினி" வாசகர்கள் யாவரும் படித்துப் பார்த்திருக்கலாமென்று நம்புகிறோம்.

ஷை வியாசத்தில் கண்ட நமது "கைத்தொழில் கல்விச்சாலை"யின் கௌரவத்தைக் குறைக்கவேண்டுமென்ற கெட்ட எண்ணத்தினால் சில விரோதிகளின் தூண்டுகோளின்படி ஷை நிருபர் ஷை வியாசம் எழுதத் துணிந்ததாகத் தெரிகிறதேயன்றி வேறல்ல.

ஷை வியாசம் எழுதிய விலாசத்தாருக்கோ, அல்லது அவரது ஊரில்

வேறு விலாசத்தாருக்கோ, நாளதுவரை, நாங்கள், "கைத்தொழில்முறை" கள் அனுப்பவில்லை. அதுவன்றி எங்கள் கணக்கைப் பரிசோதித்துப் பார்த்ததிலும் அனுப்பியிருப்பதாகத் தென்படவில்லை.

ஷை வியாசத்தில் கண்டபடி ஐரோப்பா, அமெரிக்கா முதலிய அன்னிய நாடுகளுக்கு நாம் நேரில் போனதாகவோ, அங்கு சஞ்சாரம் செய்ததாகவோ, எங்கள் விளம்பரங்களில் குறிப்பிடவில்லை. ஆனால்,

மேல்நாட்டிலுள்ள அனேக "கைத்தொழில்" நிபுணர்களிடத்தில் கடித மூலமாகவும், பத்திரிகைகள் மூலமாகவும், விலை உயர்ந்த புத்தகங்கள் மூலமாகவும், தொழில்களைக் கற்றுக்கொண்டு அவைகளை ஆராய்ச்சி செய்து, எங்கள் அநுபவத்தில் சித்திபெற்ற தொழில்முறைகளை மாத்திரம் வெளியிட முன்வந்திருக்கிறோமேயன்றி, உலகத்தில் வெளிவராத நூதன கைத்தொழில் முறைகளைக் கண்டுபிடித்து நாங்கள் வெளியிடுவதாக எங்கள் விளம்பரங்களில் குறிப்பிடவில்லை. அவ்விதமே உண்மையான தொழில்முறைகளை வெளியிட்டும் வருகிறோம். அதன்படி தொழில் செய்து அனேகர் சுகஜீவனம் செய்தும் வருகிறார்கள். அவைகள் சம்பந்தமாய் ஏராளமான நற்சாட்சிப் பத்திரங்களும் கிடைத்திருக்கின்றன. அவைகள் யாவும் புத்தகரூபமாக அச்சிடப்படுகின்றன. தேவையானால் எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். மேற்கண்டவைகள் பொய் நிஜமென்பதற்கும், மேல்நாட்டுச் சகல கடிதப்போக்கு வரத்துகளையும், கைத்தொழில் சம்பந்தமான விலை உயர்ந்த ஆங்கிலப் புத்தகங்கள், பத்திரிகைகள், முதலியவைகளையும், ஒரிஜனல் நற்சாக்ஷிகளையும், எங்கள் ஆபீசில் நேரில்வந்து பார்வையிடலாம்.

ஒரே தொழில்முறை பல புத்தகங்களில் வெளிவந்திருப்பதினால் ஷை தொழில்முறையின் கௌரவம் குறைந்துவிட்டது என்று நினைப்பது முற்றிலும் பிசகு. ஷை தொழில்முறைகள் உண்மையுள்ளனவா? நல்ல லாபம் கொடுக்கக்கூடியவைதாமா? என்பவற்றைமாத்திரம் ஆராய்ச்சி செய்ய வேண்டியது முக்கியமாகும்.

ஓர் சந்தோஷம்! ஷை நிரூபர் அவரது கடைசிப் பாராவில் "இவ்விஷயத்தைப்பற்றி நாம் எழுதத்துணிந்தது தொழில்முறைகள் பொய்யென்றாவது, ஒன்றைக் குறைத்துக்கொண்டதைப்பற்றியாவது விவரித்துக் காட்டவல்ல" என்று நம் தொழில்முறைகளையும் ஆராய்ச்சிசெய்து, தொழில்கள் உண்மையென்று ஒப்புக்கொண்டு எழுதிய விஷயத்தில் மிகவும் சந்தோஷமேயாகும்!

எங்களுக்குக் கிடைக்கும் ஆர்டர்கள் ஒவ்வொன்றுக்கும், நாம் உடனுக்குடன் விளம்பரத்தில் கண்டபடி தொழில்முறைகள் யாவும் ரிஜிஸ்தர்மூலம் அனுப்பிவருகிறோம். அப்படியிருக்க 11 தொழில் முறைகள் அனுப்பி ஒரு தொழில்முறைமாத்திரம் அனுப்பாமலிருப்பதாயும், அதை இந்நாள்வரை எதிர்பார்த்தும் காணவில்லை என்றும், குறைகூறி இருப்பது எங்கள் கௌரவத்தைக் குறைக்கவேண்டுமென்ற பொறாமையுள்ள பெரும் கெட்ட எண்ணமேயாகும். இந்த நிமிஷம்வரை நம்மிடம் தொழில் கற்றுக்கொண்டவர்களில் ஒருவருக்காவது பாக்கித்தொழில்முறை அனுப்பவேண்டியதாக எங்கள் கணக்கில் தென்படவில்லை. நிற்க,

நம் தேசமுன்னேற்றத்திற்காக ஏராளமான பொருள் செலவுடன் "கைத்தொழில்முறைகள் யாவும் ஆராய்ச்சிசெய்து உண்மையான தொழில்முறைகளைத் தேர்ந்தெடுத்து, நேரிலோ, தபால் மூலமாகவோ, சந்தேக

நிவாரணங்களுடன் கற்றுக்கொடுப்பதற்காக, கடிதப்போக்குவரத்துச் செலவுக்காகவும், ஆபீஸ் சிப்பந்திச் செலவுக்காகவும், பத்திரிகைகளின் விளம்பரச்செலவுக்காகவும், உண்மையான 12 தொழில்முறைகளுக்குக் குறைந்த கட்டணமாகிய ரூபாய் 10 (பத்து) விதித்திருப்பது, ஷை நிரூபருக்கு ஜாஸ்தியாகத் தோன்றியதின் காரணம் அவரது வறுமையின் கொடுமையேயாகுமென நாம் யூகிக்கவேண்டியதா யிருக்கின்றது.

ஓர் வக்கிலானவர், இரண்டு ரூபாய் விலையுள்ள சிறு "லா" புத்தகத்திலுள்ள முக்கியமான ஓர் சட்டத்தை ஜட்ஜி முன்னிலையில் எடுத்துக்காட்டி ஓர் பெரிய கேசை ஜெயித்து, கக்ஷிக்காரரிடம் நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும், பீஸ் வாங்குவது ஷை நிரூபருக்குத் தெரிந்திருக்குமேயாயின், அதற்கும் ஷை நிரூபர் இரண்டு ரூபாயுள்ள சிறு புத்தகத்திலுள்ள ஓர் சட்டத்தைக்கொண்டுதானே கேஸை ஜெயிக்கிறார்; அவருக்கு ஏன் ஜாஸ்திபணம் கொடுக்கவேண்டுமென்றும், வக்கில்கள் எல்லோரும் பகற்கொள்ளையடித்து மோசம்செய்து வருகிறார்களென்றும், இனிப் பொது ஜனங்களுக்குத் தெரியப்படுத்த முன்வருவார்போலும். நிற்க,

ஏராளமான லாபத்தைக் கொடுக்கக்கூடிய தீக்குச்சி, மெழுகுவத்தி, பலவித சோப், ரப்பர்ஸ்டாம்பு, கண்ணாடிக்கு ரசம் பூசுதல், இங்கு, மற்றுமுள்ள பல சில்லறைத் தொழில்கள் யாவும், நேரிலும், தபால்மூலமாகவும், சந்தேக நிவாரணங்களுடன் கற்றுக்கொடுக்க நம் தமிழ்நாட்டில் இதுவரை ஒருவரும் முன்வந்திருப்பதாக எங்களுக்குத் தெரியவில்லை. அக்குறைவை நிவர்த்திக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் அதே தொழிலாகச் சகல "கைத்தொழில் முறைகளையும் ஏராளமாகப் பொருள்செலவிட்டு ஆராய்ச்சி செய்து பொது ஜனங்களுக்கு உண்மையான தொழில்முறைகளைக் கற்றுக்கொடுக்க முன்வந்திருக்கும் எங்களுக்கு, மற்றவர்களைப்போல் ஆதரவளிக்காது பொய்க்கட்டுரை எழுதி எங்கள் கௌரவத்தைக் குறைக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் வியாசம் எழுதிய ஷை நிரூபரின் குணத்தைப் பற்றி நாம் வருந்தாமலிருக்க முடியவில்லை.

ஷை நிரூபரின் வியாசத்தில் 2, 7, 8, இலக்கத்திலுள்ளவை நீங்கலாக மற்ற முறைகள் யாவும் "கைத்தொழில்" சாஸ்திரங்களில் இருப்பதாகக் குறிப்பிட்டிருப்பதால் அதைப் பார்க்கவேண்டுமென்ற ஓர் பேரவாவுடன் அவைகளில் சில புத்தகங்கள் நாம் பார்வையிடாததால் ஷை புத்தகங்களுக்கும் ஆர்டர் செய்திருக்கின்றோம்.

2, 7, 8, தொழில்கள் ஷை புத்தகங்களில் இல்லையென ஷை நிரூபரே ஒப்புக்கொள்கிறார். அத்துடன் நம் கியாட்லாக்கில் பிரதானமாகக் குறிப்பிட்டிருக்கும் சோப், ரப்பர்ஸ்டாம்பு, இவ்விரண்டு தொழில்களைப்பற்றியும், நாங்கள் வெளியிட்டிருப்பதுபோல் அவ்வளவு தெளிவாயும், அனுபவமுள்ள தொழிலாயும் ஷை நிரூபர் குறிப்பிட்டிருக்கும் புத்தகங்களில் காணமுடியாதெனத் திண்ணமாய்க் கூறுவோம்.

நம் தேச முன்னேற்றத்திற்கு உண்மையாக உழைக்க ஷை நிரூபர் முன்வந்திருப்பாரானால் எங்களைப்போல் பல நூல்களையும், பல பத்திரிகைகளையும் ஆராய்ச்சிசெய்து, எங்களைக்காட்டிலும் குறைந்த விகிதத்துக்கு, உண்மையானதும், அனுபவமுள்ளதும், ஜாஸ்தி லாபம் கிடைக்கக்கூடியதுமான தொழில்முறைகளைப் பொதுஜனங்களுக்குக் கற்றுக்கொடுக்க முன்வரவேண்டுமேயல்லாது, தேசமுன்னேற்றத்திற்காக உழைத்துவரும் எங்

களைக் குறைகூறி எழுத முன்வருவது அழகல்லவென்பதை நம் வாசகர்கள் யோசித்து நன்கு தெரிந்துகொள்ளலாம். "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம், சொல்லியவண்ணம் செயல்"—(குறள்)

பொறுமைகொண்டு பொய்க்கட்டுரை வரைய இனி முன்வராமலிருக்கும்படிக்கும், தேசமுன்னேற்றத்திற்காக உழைக்க முன்வரும்படிக்கும், ஷை நிருபருக்கு நல்லருள்புரியவேண்டுமாய் எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திப்பதோடு ஷை நிருபரின் வியாசம் பொய் நிஜமென்பதைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு எங்களுக்கு இதுவரை கிடைத்திருக்கும் நற்சாக்ஷிப்பத்திரங்களுக்கு ஓர் கார்டு எழுதிப் பெற்றுக்கொள்ளும்படிக்கும், எங்கள் தொழில்முறைகளை வரவழைத்து ஆராய்ச்சிசெய்து தொழிற்சாலைகள் ஏற்படுத்தி ஏராளமான பொருள் சம்பாதித்துச் சுகமாய் ஜீவிக்கும்படிக்கும் நம் "ஆனந்தபோதினி" வாசகர்கள் யாவருக்கும் விஞ்ஞாபனம் செய்துகொள்கிறோம். கே. எஸ். வைத்தியநாதன்,

"கைத்தொழில் கல்விச்சாலை", சிவகங்கை.

குறிப்பு:—கா. க. தனபாலன் என்ற நண்பர், இந்நண்பருடைய விளம்பரத்தால் தாம் நஷ்டமடைந்ததாகக் குறைகூறி அதை, நம் போதினியில் பிரசுரிக்குமாறு கேட்டுக்கொண்டதால் அதை நாம் பிரசுரித்தோம். இப்போது இவர், அவருடைய அபிப்பிராயம் தவறென்பதையும், தம்முடைய தொழில் உண்மையென்பதையும் தக்க ஆதாரங்களால் காட்டி இவ்வியாசத்தை வரைந்து, பத்திரிகையில் வெளிப்படுத்துமாறு நமக்கனுப்பியிருப்பதால் இதனையும் வெளியிட்டிருக்கின்றோம். மற்றொரு நண்பரும் இவருடைய தொழின்முறைகளைப் புகழ்ந்தெழுதியிருக்கின்றார். அதனையும் இதனடியிற் பிரசுரித்திருக்கின்றோம். இவற்றைப் படித்து நேயர்கள் உண்மை எதுவோ அதனை உணர்ந்துகொள்வார்களாக. இனி இவ்விஷயமாகவரும் வியாசங்கள் பிரசுரிக்கப்படமாட்டா. விளம்பரங்களின் பொறுப்பு நம்மைச் சார்ந்ததல்லவென்பதை நேயர்கள் உணர்க. ப-ர்.

---

## சோம்பல் ஒழிந்து கவலை நீங்கியது.

### (பகற்கொள்ளையும் அல்ல படுமோசமும் அல்ல.)

இவ்விஷயத்தை அலக்ஷியம் செய்துவிடாது (உண்மை உணர்தல் என்ற வியாசத்தின் கருத்துப்படிக்கு உண்மைதெரிய) அனைவரும் அறியும்படி செய்வது ஆனந்தபோதினியின் கடமையாகும்.

நமது ஆனந்தபோதினி ஐப்பசிமாசம் சஞ்சிகையில் வெளிவந்த பகற்கொள்ளையும் படுமோசமும் என்று தலையங்கம் கட்டி கா. க. தனபாலர் எழுதியிருக்கும் நிருபத்தையும் பத்திராதிபர் குறிப்பையும் பார்த்து வருத்தமுற வேண்டியதாய் இருக்கிறது. ஏனெனில் நான் ஆனந்தபோதினியில் (தனபாலர் குறிப்பிடும் விளம்பரத்தைப்) பார்த்துச் சிவகங்கைக் கைத்தொழில் கல்விச்சாலை அதிபருக்கு லெட்டர் எழுதினேன். 2,3 தினத்தில் எனக்குப் பதில் வந்தது ஆனால் தனபாலர் சொல்லுகிறபடி அன்னிய தேசங்களில் அவர் சஞ்சாரம் செய்ததாய் எழுதவில்லை. இதுபோல் இன்னும் சில பொய்யுரைகள் தனபாலர் நிருபத்தில் காணப்படினும் அதைப்பற்றி இங்கு விவரித்து ஆனந்தபோதினியின் கலத்தை அடைக்க எனக்கு இஷ்டமில்லை. நான் ரூபாய் பத்தும் மணியார்டர் செய்தேன். 1-வது சோப் செய்யும் முறை தவிர பாக்கி 11 முறைகளும் வந்து சேர்ந்தன. 1-வது முறை கைவசமில்லை என்றும் அச்சானதும் அனுப்புவதாயும் லெட்டர் கிடைத்தது.

மேற்படி லெட்டர்படி 1-வது முறையும் வந்து சேர்ந்தது. மறுபடியும் சோப்பு செய்வதற்கும் இன்னும் சில சாமான்கள் செய்வதற்கும் எனக்கு ஏற்பட்ட பல சந்தேகங்களைப்பற்றி லெட்டர் எழுதினேன். என் சந்தேகங்களை நீக்கிச் சரியான பதிலும் தொழிலுக்கு வேண்டிய டப்பி, பாட்டில், மருந்துகள், அழகிய லேபிள் முதலிய எல்லாச் சாமான்களும் மலிவாய்க் கிடைக்கக்கூடிய இடங்களும் விலாச ஜாப்தாவும் இன்னும் நான் செய்யும் சாமான்களை விற்பதற்குத் தகுந்த யோசனைகளும் விளம்பரம் செய்வதற்குப் பத்திரிகைகளின் விலாசமும் அதன்கட்டணமும் இன்ன இன்ன பத்திரிகை ஜாஸ்தி பிரசுரமாகிறது விளம்பரத்திற்குப் போதியது என்றும் தெரிவித்திருக்கிறார். இவ்வளவுதூரம் செய்கிறவர் பரோபகாரிதான். இதற்கு 10 ரூபாய் கொடுப்பது ஒரு பெரிதல்ல அவருக்கு விளம்பரம்செய்யும் செலவும், சிப்பந்திகள் வகையறாச் செலவும் ஜாஸ்தியாகும் என்றும், அவருக்கு அதிக மிச்சம் இல்லையென்றும் தெரியவருகிறது. இன்னும் அவர் வேண்டிய எல்லாத் தொழில்களும் அனுபவித்துப் பார்த்து முன்வந்தவரென்றும் தெரிகிறது. அவர்பேரில் குறை கூறுவது பாபகாரியமாகும். தொழில்செய்ய ஆவல்கொண்ட எந்தப் புத்திமானும் எவ்வளவு படித்திருந்தாலும் குறை சொல்லமாட்டான் என்பது திண்ணம். புஸ்தகங்களை வாங்கிச் சும்மா வைத்துக்கொண்டு எல்லாம் தெரிந்ததாகச்சொல்லி மற்றவரை மிரட்டும் சுபாவமுடையவர்களுக்கு இவ்விலை ஜாஸ்திதான்.

நான் இதுவரையில் எத்தனையோ புஸ்தகங்களையும், (தனபாலர் குறிப்பிட்ட பேரில்லாத கைத்தொழில் புஸ்தகம் உள்பட) பார்த்து அனாவசியமாய்த் தொகை செலவுசெய்து வருத்தமுற்றுச் சோம்பியிருக்கும் சமயம் நமது ஆனந்தபோதினியின் உதவியால் கவலை நீங்கி, தொழில்செய்ய ஆரம்பித்திருக்கிறேன். ஆதலால் பத்திராதிபர் விளம்பரம் செய்ததற்கு வருந்தாமல் சந்தோஷமடைய வேணுமாய்க் கேட்டுக்கொள்கிறேன். ஆனந்தபோதினி ஆரம்பமுதல் இதுவரையில் ஒரு சஞ்சிகைகூட தவிராமல் படித்திருக்கிற நான் ஆனந்தபோதினிக்கு அவதூறுவரச சம்மதிக்கேன். அது இதுவரையில் தன் நிலைதவறவில்லை என்று நிச்சயமாய்க் கூறுகிறேன். அது இனியும் அப்படியே இருக்கும் என்று நிசசயமாய் நம்புகிறேன்.

நிருபம் எழுதும் நண்பர்கள் பொய்யுரை கலக்காமல் வேறு குரோத புத்தியையும் காட்டாமல் உண்மையை உரைத்தால் நம் தேசம் முன்னேற்றமடையும். மு. சொக்கலிங்கம் பிள்ளை, பூந்தோட்டம், P. O.

---

## ஓரறிவிப்பு.

சென்ற ஐப்பசிமாத ஆனந்தபோதினி சஞ்சிகையில் 174-ம்பக்கத்தில் 'பொதுசமாசசாரங்கள்' என்னுந் தலையங்கத்தின்கீழ் 'ஓரறிவிப்பு' என்று எழுதியுள்ள விஷயத்தின்படி 'வினவுக்கு விடைதேவை' என்பதற்கு 'மதுரை' என்று முதலாவதாகச் சென்னைப் பவழக்காரத் தெருவிலிருந்து விடை யெழுதிய நண்பர் மேலச் சிவபுரி போஸ்ட், வேந்தன்பட்டி, குப. நா. ஜெயங்கொண்டான் செட்டியார் என்பவருக்குப் பதிணோராவதாண்டு ஆனந்தபோதினி சஞ்சிகையை நாங்களே இனமாக அனுப்பிவருகிறோம்

ப-ர்.

---

## ஒரு வேண்டுகோள்.

அன்பார்ந்த நண்பர்களே! நமது ஆனந்தபோதினியில் புரட்டாசிமாத சஞ்சிகையில் வினவுக்கு விடை தேவை என்ற வியாசத்திற்குச சரியான

பதில் அளிப்பவர்க்கு இனாமாக ஆனந்தபோதினிச் சஞ்சிகையை ஓராண்டுக்குத் தருவித்துக் கொடுப்பதாக எழுதியிருந்த தஞ்சை ம. அ. அபுபக்கர் ராவுத்தர் கேட்டுக்கொண்டபடி சென்னை பவழக்காரத்தெரு நண்பரொருவர் மதுரையென முதலாவதாகக் கூறியிருப்பதால், அவருக்குச் சஞ்சிகையில் கூறியபடி ஓராண்டுக்கு இனாமாகப் பத்திரிகை வாங்கிக்கொடுக்கக் கூடிய அபுபக்கர் என்பவர் இருக்குமிடந் தெரியாமல் மறைந்துகொண்டாரென்றும், அதனால் மதுரை யெனக் கூறிய சொல்லானது சரி, சரியல்லவென்பதையும் துணியக்கூடவில்லை யென்றும், அது எப்படியிருந்தபோதிலும் மதுரை யென விடை கூறியவருக்கு நாமே சஞ்சிகையை இனாமாக அனுப்பத்தீர்மானித்திருக்கிறோமென்றும் பத்திராதிபர் எழுதியிருந்ததைப் பார்த்துவிடுவிக்காரர் செய்கைக்கு வருந்துகிறோம். விடுவானது பத்திரிகையில் பிரசுரமானபோது விடை என்று கிடைக்குமென்று எதிர்பார்க்க வேண்டிய விடுக்காரரே மறைந்துகொண்டு அதைப் பிரசுரஞ்செய்த பத்திராதிபரையே கஷ்டநஷ்டத்திற்குப் பாத்தியப்படச்செய்வது நீதியாகுமா?

சந்தாதாரர்களுக்கென்றே யிருந்த ஊக்கங்கொண்டு நன்மார்க்கங்களைப் பத்திரிகைமூலமாய்க் கூறிவரும் பத்திராதிபருக்கே இவ்வித கஷ்ட நஷ்டமுண்டுபண்ணுவது பரிதபிக்கத் தக்கதே. சந்தாதாரர்களாகிய நாமிருந்தும் பத்திராதிபருக்கு இவ்வித கவலைக்கிடங்கொடுப்பது சரியல்லவென்று பத்திரிகாபிமானிகளைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

அவர் விடுவிய விடுவுக்கு விடை 'மதுரை' யென்றே வைத்துக் கொண்டு அதுவும், அதனால் அயர்ச்சியடைந்த ஆனந்தபோதினிக்குக் களிப்புண்டாகும்படி அதன் புகழும் விளங்க ஒரு செய்யுளமைத்து, அக்கவியில் முதலாவது வரியிலுள்ள முதலெழுத்தும் கடையெழுத்தும் மெல்லினமாகிய 'ம' ஆகவும், இரண்டாவது வரியின் முதலெழுத்தும் கடையெழுத்தும் வல்லினமான 'து' ஆகவும், மூன்றாவது வரியின் முதலுங் கடையும் இடையினமான 'ரை' யாகவும் வரக்காட்டி எமது அன்பை வெளிப்படுத்துகிறோம். இச்செய்யுளின் முன் மூன்றடிகளின் முதலெழுத்துக்கள் 'மதுரை' என்றமையும், ஈ அடிகளின ஈற்றெழுத்துக்களும 'மதுரை' என்றமையும். கவி.

மதிகதிர் போலும் மகிழ்தர வுலகா னந்தபோ
　　தினியையிங் கம்ம
துதிசெய்வோர் துயரில் மூழ்கிடா ரென்றுஞ் சுகிர்தமாம்
　　பலன்களை *யடைந்து
ரைதரு நாத னருளையே சார்வார் ஞானிலம்
　　புகழ்ந்திடு மவரை
வதியிப்பா வதன்முன் னடிகளின் முதலீற் றெழுத்துகள்
　　மதுரையாம் பாரீர்.

பொ. வெங்கிடாசலக் கண்டன்,
கவிஞன், அலங்கியம்.
அ. சுப்பிரமணிய செட்டியார்.

குறிப்பு:—இந்நண்பர்கள் இங்ஙனம் பரிவுகூர்வதுடன், விடைகாரருக்கு நாம் இனாமாக அனுப்பும் சஞ்சிகையின் சந்தாவின் சிறிது பாகத்தையுஞ் செலுத்தியிருக்கிறார்கள். பதி.

---

* அடைந்து + உரைதரும் = அடைந்துரைதரும் உரைதரு-வேதத்தை உதவிய, அல்லது அன்பர் புகழ்ந்துரைக்கின்ற.

# பகவத்கீதை வசனம்.
## (172-ம் பக்கத் தொடர்ச்சி.)

[கருமத்தில் முயலக்காரணமாகிய இராகத்துவேஷாதிகள் ஞானியினிடத்தின்றாமாதலின் அவனிடத்தே சர்வ கரும பரித்தியாகஞ் சம்பவிக்கும், என்பது முன்னருளப்பெற்றது; இப்போது ஞானியிடத்தில் சர்வ கருமங்களின் பரித்தியாகம் சம்பவியாதாம் என்பதில் ஸ்ரீ பகவான் ஹேது வையருளல்.]

ஹே அர்ச்சுன! தேகாபிமானி முற்றினுமே கருமத்தைத் தியாகிப்பது முடியாத காரியமாதலின் அஞ்ஞானி கருமபலத்தை விடுவனேல் அவனும் தியாகியே யெனப்படுவன்.

யான் மனுடன், யான் பிராஹ்மணன், யான் இல்வாழ்வோன், எனக் கெடுக்கமுடியாத அபிமானத்தானே தேகத்தைத் தரித்தலும் காத்தலுஞ் செய்பவன் தேகபிருத்தெனப்படுவன்; அதாவது, கருமாதிகார ஹேதுபூத பிராஹ்மணாதி வர்ண ஆசிரமங்கள், அவற்றிற்காசிரயமாய கருத்திருத்துவாதிகள், அவற்றிற்காசிரயமாய தூலாதி தேகங்களாம்; அநாதியவித்தை வாசனைகளின் வயத்தால் வியவகாரயோக்கியதை ரூபத்தானே கற்பிதமாதலின் அசத்தியமாகிய அவற்றைச் சத்தியமெனவெண்ணி, தன்னிற் பின்னமாயினும் அபின்னமாய் நினைந்து முன்மொழிந்த அபிமானத்தானே தேகத்தைத் தரித்துப் போஷிப்பவன் தேகபிருத்தாவன் என்பதாம். கருமாதிகார காரணவடிவ காய அபிமானங் கழலாதவன் காயபிருத்தாவன் என்பது கருத்தாம். அவன் கருமங்களில் முயல்வதற்குக் காரணவடிவமாகிய இராகத்துவேடாதிகளின் மிகுதியானே நிரந்தரம் கருமங்களில் முயல்பவனாவன். விவேகமின்றிய தேகாபிமானி தத்துவஞானியைப்போலக் கருமத்தை முற்றினும் விடமுடியான்; ஏனெனின், காரணசாமக்கிரியிருக்கும்வரை அத்தியந்தங் காரியபரித்தியாகம் செய்யமுடியாதாம். இராகத்துவேடாதி ரூபகாரண சாமக்கிரி அஞ்ஞானியின்பாலுளதாதலின் மனத்தூய்மையின்பொருட்டுக் கருமங்களைச் செய்த போதினும் பரமேசுவரகிருபையின் வயத்தால் கருமபலத்தைவிடின் அவனும் தியாகியே யாவன், அதாவது கருமகருத்தா அஞ்ஞானி உண்மையாய் அத்தியாகியாயினும் துதியின்பொருட்டுத் தியாக சப்தயோக்கியன் கௌணமாயாவன். அத்தியந்தம் கருமத்தியாகமோ தேகாபிமானமற்ற பரமார்த்த தரிசியே செய்யத்தக்கவன் ஆவனாதலின், அத்தகைய தத்துவஞானியே தியாகசப்த யோக்கியன் முக்கியனாயாவன். கருமபலத் தியாகி மிகவும் துர்லபன் ஆவன். பலேச்சையை விடுத்துச் சித்தசுத்தியின்பொருட்டு நித்தியகருமங்களைச் செய்யும் புருடனும் துர்லபனே யெனவறிக.

[ஹே பகவன்! தேகாபிமானமுடைய பரமான்ம ஞானமற்ற கருமியும், பலேச்சையிலாதமாத்திரத்தானே கௌணசந்நியாசியெனப் பெறுவன்; தேகாபிமானமில்லாத பரமான்மஞானமுற்ற பலசகித சர்வ கருமத்தியாகியாகிய தத்துவமுணர்ந்தவனே முக்கிய சந்நியாசியெனப் பெறுவன் என்பதாகத் தேவரீர் முன் அருளினீர்கள்; கௌணசந்யாசியின் பலத்திலும் முக்கிய சந்யாசியின் பலத்திலும் யாது விசேடமாகும். விசேட லாபமின்மையால் கௌணத்தன்மையும், லாபமுண்மையால் முக்கியத்தன்மையும் சந்யாசியின்பால் உண்டாமன்றோ. கருமபலத் தியாகித்தன்மையோ அவ்விருவர்பாலும் சமமேயாமாதலின் அதனாலும் சிறப்புச் சம்பவியாதாம்; மற்றோ, இதனினும் அயலொருசிறப்பே கூறியருளல்வேண்டும் என்னும் அருச்சுனனது வினவுக்கு ஸ்ரீ பகவான் விடைபகர்ந்தருளல்.]

ஹே கௌந்தேய! கௌணசந்யாசிகட்கோ மரணத்தின் பின்னர்க் கருமங்களின் அநிஷ்ட இஷ்ட கலப்பு என்னும் மூவகைப் பயன் அடைவுறும்; முக்கிய சந்நியாசிகட்கோ ஒருகாலும் அம்மூவிதபலன் அடைவுறாவாம்.

ஹே பார்த்த! கருமங்களின் பலத்தியாகவானாயினும் கருமங்களை யனுஷ்டிப்பவனும், ஆன்மஞானத்தில் முயல்பவனும், அதையடையாதவனும் ஆகிய அத்தியாகியென்னும் கௌண சந்நியாசிக்கு ஆன்மஞான இச்சையாகிய விவிதிஷையுண்டாங்காலும் சித்தசுத்தியைச சமபாதியாது முன்னரே சரீரம் நீங்குமாயின் அவன் மரித்தபின் முன்செய்த கருமத்திற்குச் சரீரக்கிரகணரூப பலத்தை அவசியம் அடைவன். சரீர கிரகணரூப கருமபலம் காரணரூபகருமங்களின் மூவகைத்தன்மையானே அநிஷ்டம் இஷ்டம் மிசிரம் என மூவகைத்தாம். பாவத்திற்கு அநிஷ்டபலமாம்; புண்ணியத்திற்கு இஷ்டபலமாம்; இரண்டிற்கும் மிசிரபலமாம். இவ்வுடம்பு எனக் கடைவுறுதொழிக என்னும் பிரதிகூலத்தன்மையின் ஞானவிஷயம் நரகசம்பந்தியாய திரியக்குத் தேகமாம்; அது அநிஷ்டபலமெனப்படும். இத்தேகம் எனக் கடைவுறுக என்னும் அனுகூலத்தன்மை ஞானவிடயம் தேவதைத் தேகமாம்; இது இஷ்டபலமாம். பாவபல புண்ணியபலத்தோடுகூடிய மநுடாதி தேகப் பிராப்தி மிசிரபலமாம். முமுக்ஷுக்கள் இம்மூவகைப் பயன்களையுந் தியாகிக்கவேண்டுமென்பதாம். இதுவரை கௌண சந்நியாசிகள் மரித்தபின் சரீரத்தை யடைவார்கள் என்றதாம். இனி முக்கிய சந்நியாசிகட்கோ பிரஹ்ம சாக்ஷாத்காரத்தானே காரியசகித அவித்தை நீங்கவே விதேக கைவல்விய ரூபமோக்ஷமே கிடைக்கும் என்றருளல்: விதிப்பிரகாரம் சருவ கருமங்களையும் விட்டவரும், யான் பிரஹ்மரூபன் என்னும பரமான்ம சாக்ஷாத்காரத்தோடுகூடியவரும் ஆகிய பரமஹம்ச பரிவிராஜக முக்கிய சந்நியாசிகள் மரித்து, கூறிய மூவகைப் பலத்தையும் எத்தேயத்தும் எக்காலத்தும் அடையார்கள். ஏனெனின், அவர்கட்கு ஞானத்தானே யஞ்ஞானமழிந்ததன்றோ? அஞ்ஞானமழியவே யதன் காரிய சர்வ கருமங்களும் நீங்கியேபோம். ஜன்மத்தைத் தருவதில் அஞ்ஞானமும் அதன் காரியமும் அன்றோ காரணம். அவவிரண்டும் அகலவே பிறப்பெங்ஙனமாம். இதன்கண்ணிசசுருதியையும் உணர்க:—பராபரமாம் அப்பொருளை வயங்கக்கண்டால் பெருமனக்கட்டறும் ஐயமறும் கருமமறும்" என்பதாம். இதனை ஸ்ரீ வியாசபகவானும் அருளியுள்ளார்.—பிரத்தியக்கபின்ன பிரஹ்ம சாக்ஷாத்காரமுளதாகவே தத்துவஞானியின் பூர்வசஞ்சித கருமமோ விநாசமாம். மேற்செய்யும்வினை தீண்டவேமாட்டாது. இப்பொருள் சுருதியிருதிகளிலும் கூறப்பெற்றுளது என்பதாகி சுருதி சூத்திர வசனம் பரமான்ம ஞானத்தானே சர்வ கருமங்களின் நாசத்தைக் கூறுநிற்றலின் இது துணியப்பெறும்:—முன்மொழிந்த கௌண சந்நியாசிகட்கோ முற்புண்ணிய பாவகருமவயததால் மீண்டும் சரீரக் கிரகணரூப சம்சாரம் அவசியமுண்டாம். முக்கிய சந்நியாசியாகிய தத்துவவேத்தாவிற்கோ அவித்தை முதலியவையின்மையின் மீண்டும் சம்சாரம் அடைவுறுதாம்; மற்றோ, மோக்ஷமேயடைவுறும். இவ்வகை இவ்விரண்டினும் பல விசேடமாம். சிலர் கூறுவதாவது:—கருமபலத் தியாகத்தானே, கருமஞ்செய்யும் கருமியின்பாலும் சந்நியாசியென்னும் சப்தம் பிரயோகிக்கப்பட்டுளதாதலின், சந்நியாசி சப்தத்தானே, கருமபலத்தியாகஞ்செய்த கருமியையே கொள்க. அல்லாமலும், முன்னுரைத்த அநிஷ்டாதி மூவகைப்பலத்தைச சந்யாசிகளிடத்தே நிடேதஞ்செய்யப்பட்டதும் சாத்விககருமிகள்பாற் சம்பவிக்கும். என்னை,

நித்திய நைமித்திக கருமங்களைச் செய்யாமல், நிஷித்தகருமங்களைச் செய்
தலின் உண்டாம் பாவ உற்பத்தி, சாத்விக கருமிகட்கு அவற்றை முறையே
செய்தலின் செய்யாமையின் உண்டாகாதாம்; ஆகையால் அநிஷ்டபலப்
பிராப்தியுண்டாகாதாம். அவர்கள் காமியகருமத்தைச் செய்யாமையின்,
ஈசுர அர்ப்பணமதியானே பல பரித்தியாகஞ் செய்தலின் இஷ்ட பலப்
பிராப்தியுமுண்டாகாதாம்; இதனானே கலப்புப் பலமுமுண்டாகாதாம். இம்
முறையே சாத்விக கருமிகட்கு மூவகைப் பயனுமுண்டாகாதாம். இதுபற்
றியே சாஸ்திரத்திலுங் கூறப்பட்டுளது. முமுக்ஷு காமிய கருமத்திலும்
நிஷித்தகருமத்திலும் பிரவிருத்தியான். மற்றை, எவற்றைச் செய்யாமை
யானே பிரத்தியவாயமுண்டாமோ, அந்தப் பிரத்தியவாய மகற்று மவாவி
னருயர் நித்திய நைமித்திகங்களைச் செய்வன். இத்துணைமாத்திரையானே
சமுசார அபாவமாம். இங்ஙனம் ஏகபவிகவாத நீதியாய் ஸ்ரீ பகவானது
வசனத்திற்கு வியாக்யானம் செய்பவர்பொருட்டு இது கூறுதல்வேண்டும்:-
சப்தத்தின் அர்த்தத்தின் மரியாதையை நீ நிர்ணயஞ் செய்திலைபோலும்;
எதனானே ஸ்ரீ பகவான் வசனத்திற்கு நீ யிவ்வகை வியாக்யானஞ்செய்கின்
றனையோ, ஆண்டுக் கௌண முக்கிய அர்த்தமத்தியில் யாதொரு பாதக
மும் இலதாகவே முக்கியப் பொருளின்கண்ணே சப்தபோதமுண்டாம்.
இதுவோ சப்த மரியாதையாம். இங்குப் பிரசங்கத்தில் பல சகித சர்வ
கருமங்களின் தியாகியோ சந்யாசி சப்தத்திற்கு முக்கியப் பொருளாம்.
முக்கிய சந்நியாசியின்கண்ணே கருமபலத் தியாகித் தன்மையிருப்பதே
போல நிட்காமகருமி புருடனிடத்தும் பலத்தியாகித்தன்மை யிருக்குமாத
லின், அத்தன்மை வடிவ சமானகுணத்தைக்கொண்டு அச்சப்தம் கருமி
யின்பாலும் முயலுமாதலின் அவன் அதன் கௌண அருத்தமாவன். சந்
நியாசி சப்தத்திற்கு முக்கியப் பொருள்கொள்வதில் யாதொரு பாதகமு
மின்றுமாதலின் முக்கியப் பொருளையே ஈண்டுச சந்யாசி சப்தத்தாற்
கோடல் தகுதியாம். இது சப்த மரியாதையாற் சித்தமாயதாம். காரண
சாமக்கிரி யிருப்பக்காரிய உற்பத்தியவசிய முண்டாம்; இது அர்த்தமரியா
தையெனப்படும். இதனானும் அம்முன்னறைந்த பொருளே துணியாம்.
அஃதாமாறு:—ஈசுரார்ப்பணமதியானே கருமபலம் விட்டவனும், மனத்
தூய்மையின்பொருட்டு நித்தியகரும அனுஷ்டானஞ் செய்பவனும் ஆகி
யோன், மனத்தூய்மைவாயிலாய் ஞானநிஷ்டையை யடையாமல் மத்தியில்
மரிப்பனேல், பூர்வ புண்ணிய பாவவயத்தானே மூவகைச் சரீரக்கவர்ச்சி
வடிவச சம்சார அடைவை எவனாலும் நீக்கமுடியாதாம். புண்ணியபாவ வடி
வக் காரணமிருப்பச சரீரக்கிரகண வடிவக்காரியமவசியமுண்டாம். ஞான
மில்லாதவன் அவசியம் புண்ணியபாவவயத்தாற் பிறப்பன். இது சுருதி
யிலுமுளது:—ஹே கார்க்கி! இவ்வக்ஷரத்தை யறியாமல் எவன் இம்மநுட
லோகத்தினின்றும் செல்வனோ அவனைக் கிருபணனென்றேயறி. ஆகை
யால் மனத்தூய்மையின் பல பூத ஆத்மஞான முண்டாதற்பொருட்டு நிட்கா
மன் மநுடசரீர அடைவை யவசியம் அங்கீகரிக்கவேண்டியதேயாகும். இப்
பொருள்முன் ஆறுவது அத்தியாயத்தில் நிர்ணயிக்கப்பட்டது. மனத்தூய்
மையின பின்னர்ச சாஸ்திரவிதி பூர்வகம் பல சகித சர்வ கருமங்களையும
பரித்தியாகஞ் செய்தவனாகிப் பிரஹ்மவேத்தாவாய குரு சமீபத்திற்
சென்று அவர் வாயிலாய் வேதாந்த சிரவணஞ்செய்பவன். இடையில் மரித்
திடின், ஆன்மஞானத்தையடையாத அந்த யோகப் பிரட்டனாகிய விவிதி
ஷாசந்நியாசியானவன், யோகேச்சையுடையனேல் ஸ்ரீமான்கள் வீட்டில்
பிறப்பன்; யோகேச்சையிலனேல் பிரஹ்மஞானிகள் வீட்டில் பிறப்பன்,

என்னும் இவ்வியாவும் முன்னருளப்பட்டன. இதனால் இக்கைமுதிக நியாயம் சித்தமாம்:—ஆன்மஞானமற்ற சர்வ கருமத்தியாகியாகிய விவிதிஷை சந்யாசிக்கும் சரீரக்கிரகண மவசியமுண்டாமேல் ஆன்மஞானமற்ற கருமிக்கு அஃதுண்டாமென்பதிற் கூறவேண்டியதென்னையென்பதாம். ஆகையால் அஞ்ஞானிக்குப் பூர்வ கருமவயத்தால் சரீரக்கிரகண மின்றியமையாதுண்டாம்; இது அருத்தமரியாதையானே சித்தித்ததாம். ஆகையால் சந்நியாசி சப்தத்தானே நிட்காம கருமியையே கவர்க என்னும் ஏகபவிக வாதிகளின் வியாக்கியானம் முற்றினும் அசங்கதமாம். முன்மொழிந்த ஸ்ரீமத் பாடியக்காரர் முதலியோரது வியாக்கியானமே சிறந்ததாம். (தொடரும்.)

சீடன்.

---

## மலாய்நாட்டுப் புதிய ஜீவிய சந்தாதாரர்கள்.

அடியிற்கண்ட நண்பர்கள் மலாய்நாட்டில் நமது ஆனந்தபோதினிக்குப் புதிய ஜீவிய சந்தாதாரர்களாகச் சேர்ந்திருக்கின்றனர்:—

1. ம-ா-ா-ஸ்ரீ, R. M. V. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள்.
2. ,, S. L. K. N. சுவாமிநாதன் செட்டியாரவர்கள்.
3. ஸ்ரீமதி கமலாதேவி அம்மாள், (ம-ா-ா-ஸ்ரீ, V. K. முருகேச பிள்ளை அவர்கள், மேல்விலாசம் பார்த்துக் கொடுக்கவேண்டும்.)
4. ம-ா-ா-ஸ்ரீ, T. P. நாகப்பா அவர்கள்.
5. ,, S. T. நாகப்ப செட்டியாரவர்கள்.
6. ,, K நமசிவாயம் அவர்கள்.
7. ,, V. M. அருணாசலம் செட்டியாரவர்கள்.

## மலாய்நாட்டு நண்பர்களுக்கு நன்றியறிவிப்பு.

மலாய்நாட்டிலுள்ள நம் ஆனந்தபோதினியின் அபிமானிகள் பலரும், அங்குச் சென்றிருக்கும் நம் ஏஜண்டு எஸ். இராமாநுஜாசாரியாரை ஆங்காங்கே நல்வரவேற்று நம்மை நேரில் உபசரிப்பதுபோலவே உபசரித்தும், அவருக்கு மிக்க உதவிகளைச்செய்தும், ஆனந்தபோதினுக்கு ஜீவிய சந்தாதாரர்களாகவும், சாதாரண சந்தாதாரர்களாகவும் சேர்ந்தும், புதிய சந்தாதாரர்கள் பலரைச் சேர்த்தும், நம்மையும், நம் பத்திரிகையையும் மிகக் கௌரவப்படுத்திவருவதாக நம் ஏஜண்டவர்களின் மூலம் அறிகிறோம். இவர்கள் இங்ஙனம் தமிழிலும், நம் பத்திரிகைமீதும், நம்மீதும் இத்தகைய ஆர்வம் செலுத்தி வருதல்பற்றி இவர்கட்கு நாம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமை பூண்டிருக்கின்றோம். ப-ர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(174-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 12-வது அத்தியாயம்

அம்மாது மிக்க புத்தி சூக்குமமுடையவளென்று ஆனந்தஸிங் அறிந்து கொண்டு அவளுக்குத் தக்கபடி நடக்க ஆரம்பித்தான்.

அவள் அவனை நோக்கி "நான் கூறுகிறேன். வாரன்டில்லாமல் நீ யென்னைப்பிடிக்க முடியாது" என்றாள்.

ஆனந்தஸிங் "நான் உன்னைக் கைதுசெய்வேன்" என்று அவள் தோள்மேல் கைவைத்து "நீ யென்கைதி" யென்றான்.

அவ்வளவு தைரியமாய்ப் பேசியமாது அச்சமயம் அவன் முகத்தி லிருந்த ஒருவிதப் பிரகாசத்தையும் தைரியத்தையும் கண்டு அடங்கி யொடுங்கி யழ ஆரம்பித்தாள்.

ஆனந்:—"நான் உனக்காக மிக்க விசனப்படுகிறேன். நீ மனதறிந்து அக் குற்றத்தைச் செய்யவில்லையென்றே நான் நினைக்கிறேன். ஆயினும் கடின தண்டனையே கிடைக்கும். நீ சற்று முன் ஜாக்கிரதையோடு நடந்து கொண்டிருக்கவேண்டும்" என்றான்.

அம்மாது:—அய்யா! நான் கடவுளறிய ஒரு குற்றமும் செய்யவில்லை. என்னிடம் அனேகம் நற்சாட்சிப்பத்திரங்க ளிருக்கின்றன. இப்படகி லேயே எழு வருடமாய்க் காரியஸ்தியாயிருந்து வருகிறேன்.

ஆனந்:—இதே படகில் நடந்த ஒரு குற்றத்திற்கு உடந்தையாயிருந்ததால் தான் இப்போது நீ கைது செய்யப்பட்டது.

அம்மாது:—என்ன குற்றம்? அய்யோ! நான் மனமறிந்து ஒன்றும் செய்ய வில்லையே! தயை செய்து என்ன குற்றம் கூறும்.

ஆனந்:—"ஒரு பெண் களவாடப்பட்டதற்கு நீ உடந்தையாயிருந்தாய். இந்நகரிலிருக்கும் முதல்தரமான ஒரு குற்றவாளிக்கு நீ உதவி செய் தாய்" என்றான்.

இதைக் கேட்டதே அம்மாது திடுக்கிட்டு ஒரு நிமிடம் சிந்தித்து, அப் போதுதான் ஏதோ நினைப்பிற்கு வந்ததுபோல்,

"ஆ! தன் அம்மானை மணம்புரிந்து கொள்ள ஓடிவிட்டாளே யொரு கன்னிகை அவ்விஷயத்திலா?" என்றாள்.

ஆனந்:—அக்கள்ளர் உனக்கு அப்படிக்கதை கட்டிவிட்டார்கள். உண்மை யில் அப்பெண் களவாடப்பட்டாள்.

அம்மாது—"நான் கூறுவதும் நீ கூறுவதும் ஒரே பெண்ணாயின் நீ தவறாய் நினைக்கிறாய்" என்றாள்.

அதன்மேல் ஆனந்தலிங் தான் கண்ணாடியில் பிரதிபிம்பத்தைக் கண் டதைக் கூறி அன்று அப்பெண்ணின் அடையாளத்தைக் கூறிக்கேட்ட போது இம்மாதே அத்தகைய கன்னிகை படகில் இல்லையென்றியம்பிய தையும் கூறினான்.

உடனே அம்மாது "ஆம் ஆம். அன்றுதான். நான் அவர்கள் கூறியதை மெய்யென்று நம்பினேன். சத்தியமாய்க்கூறுகிறேன், எனக்கு உண்மை தெரியாது" என்றாள். அவள் கூறுவது உண்மையென்று ஆனந்தலிங் உணர்ந்து,

"நீ உள்ளது உள்ளபடி கூறிவிட்டு நான் சொல்வதுபோல் நடந்து கொண்டால் உன்னையிந்த ஆபத்தினின்றும் காப்பாற்றுவேன்" என்றான். அம்மாது "நான் மறைக்கவேண்டியதொன்றுமேயில்லை" யென்றாள்.

ஆனந்:—"அன்று போஜன கூடத்தில் இருந்த அப்பெண்ணின் அடையா ளங்களைக்கூறு" என்றான்.

அம்மாது "ஆ! அவள் இருந்தவிடத்தைக்கூடத் தெரிந்துகொண் டிருக்கிறாய்" என்று பவானி கூறியபடியே சரியாய்க் கூறினாள்.

அதன்மேல் ஆனந்தலிங் அப்பெண்ணின்கூடவிருந்த மாது இம்மா திரியிருக்கிறாளல்லவாவென்று தான் கண்டமாதின் அடையாளங்களைக் கூறினான். அம்மாது "ஆம். அவள் இன்று காலை படகிற்கு வந்தாள்" என் றாள்.

ஆனந்:—இராத்திரிக்குத் திரும்பிச் செல்கிறாளல்லவா?
அம்மாது:—அது எனக்குத் தெரியாது.

ஆனந்தஸிங் "நீ யிப்போது கைது செய்யப்பட்டிருக்கிறாய் என்பதை மறவாதே. நான் ஒரு நிபந்தனையின்மேல்தான் உன்னை யிப்போது சுயாதீனமாய் விட்டுவைக்கிறேன். அதாவது நான் வந்ததாவது பேசியதாவது எந்தச் சங்கதியும் நீ அம்பாதுக்காவது கன்னிகைக்காவது வெளியிடக் கூடாது. அப்படிச் செய்தாயோ அவர்கள் நடக்கையால் அது கட்டாயம் எனக்குத் தெரிந்துவிடும். பிறகு உன்கதி கடவுள்தான் அறியவேண்டும்" என்றான்.

அம்மாது:—"ஒருபோதும் நான் அப்படிச்செய்யமாட்டேன். இனியேமாந்தும் இத்தகைய ஆபத்தில் சிக்கிக்கொள்ளமாட்டேன்" என்றாள்.

ஆனந்தஸிங் "உன் நன்மைக்கே நீ யப்படிச் செய்யாதிருக்கவேண்டும்" என்று கூறிவிட்டுப் படகினின்றும் சந்தோஷத்தோடு வெளிவந்தான். இப்போது கறுப்பண்ணனைப்பற்றியாவது மலையாளியைப் பற்றியாவது அவன் சட்டைசெய்யவில்லை. அம்பாலிகையின் இருப்பிடத்தைக் கண்டுகொண்டால் பிறகு இவர்களை யொரேயழுத்தா யழுத்திவிடலாம் என்று அவன் அறிவான்.

அன்று படகில் ஏறிச்சென்ற அப்பெண்ணும் அம்மாதும் எங்கு இறங்கினார்களென்று அவன் அம்மாதைக் கேட்கவில்லை. அம்மாதைப் பின்தொடர்ந்து அவள் வாசஸ்தலத்தை யறிந்து கொள்வதென்று தீர்மானித்துக்கொண்டான்.

ஆனந்தஸிங் மனைக்குச சென்று போஜனம் செய்துகொண்டு படகு புறப்படும் சமயத்திற்கு அங்கு வந்து சேர்ந்தான். இப்போது அவன் தன் இயற்கை யழகோடு மிக்க நாணயமான உடையணிந்து காண்போர் பார்வையைக் கிரகிக்கத் தக்கவனாயிருந்தான்.

அவன் படகில் ஏறிக்கொண்ட இரண்டு மூன்று நிமிடங்கள் கழித்து கறுப்பண்ணன் வீட்டிற்குச் சென்ற அம்மாதும் படகிற்குள் வந்து சேர்ந்தாள். மேல் தட்டில் அதிகப்பிரயாணிகள் இல்லை.

அம்மாது மிக்க அழகுடையவள். மிக்க நாணயமாய் உடையணிந்து கொண்டிருக்கிறாள். தன் அழகைக்கண்டு பிறர் ஆச்சரியப்படுவதையும் மயங்குவதையும் காண மிக்க பிரியப்படுபவள். சித்திரப்படங்களையுடைய அன்றைய வாரப்பத்திரிகையைப் பார்த்துக்கொண்டிருந்த அவள் தனக்கெதிரில் ஒரு யௌவன புருடன் உட்கார்ந்து தன்னை யாவலோடு பார்ப்பதைக் கண்டாள்.

அவள் பார்வையாலேயே அவன் தன்னைப்பார்த்தது தனக்குப் பிரியமேயென்று தெரிவித்தாள். அதோடு நிற்காமல் மேல் தட்டிலிருந்து எழுந்து போய்ச் சற்று நேரத்திற்குள் திரும்பிவந்து எதையோ போக்கடித்து விட்டவள்போல் தான் உட்கார்ந்த விடத்தில் சுற்றிச்சுற்றிப் பார்த்தாள். அப்படிப்பார்த்தால் அவன் "எதாவது போக்கடித்து விட்டீர்களோ?" வென்று கேட்பான். அதே மூலமாய் அவனோடு சம்பாஷிக்க வழி யுண்டாக்கிக்கொள்ளலாம்' என்பது அவள் கருத்து.

(தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

## புதிய ராஜப் பிரதிநிதி.

இந்தியாவிற்குப் புதிய இராஜப் பிரதிநிதியாக ரயிட் ஆனரபில் மிஸ்டர் இ. எப். எல். வுட் நியமிக்கப்பட்டுள்ளார். அவரைப் போற்றி ஒரு நிருபர் எழுதுவதாவது:—

மிஸ்டர் வுட் இந்தியாவிற்கு இந்திய அரசியலைக் கற்கும் மாணவராகச் செல்லுகிறார் எல்லாவற்றையும் அறிந்தவர்போல் செல்லவில்லை; இவர் மிகவும் ஜாக்கிரதையாக தீரயோசித்தே காரியங்களைச் செய்யும் தன்மையினர். இவர் முன்னேற்றக் கொள்கையையுடையவர். மிகவும் பொறுமையுடையவர். இவருக்கு விவசாயத்தில் அதிக அனுபவமுண்டு. எனவே இவர் இந்தியாவில் விவசாய முன்னேற்றத்திற்கு அதிகப் பாடுபடுவர். இவர் சர்ச்சிலுடன் குடியேற்ற நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்தபொழுது, குடியேற்றநாட்டு, அரசியல் கைத்தொழில் பொருளாதார நிலைகளை நன்கு ஆராய்ந்திருக்கிறார்.

சமீபத்தில் இந்திய விஷயமாய் ரீடிங் பிரபுவுடன் இவர் பேசியுள்ளார். எனவே இவர் இந்தியாவில் தமது பொறுப்பைச் சரியே செலுத்துவர் என்று நம்பலாம்.

இவர் பத்திரிகை நிருபர்களிடம் தாம் தமது மனைவியுடன் செல்வதாகத் தீர்மானித்திருப்பதாகக் கூறினார். இவரது நண்பர்கள், தினம் இவருக்குச் சந்தோஷக்கடிதங்களை அனுப்பிவருகின்றனர். பல நண்பர்கள் இவரை நேரில் கண்டும் தங்களது சந்தோஷத்தைத் தெரிவித்தும் வருகின்றனர்.

புதிய ராஜப்பிரதிநிதி விவசாய விஷயங்களில் அதிக அனுபவம் அடைந்தவர். 20 வருஷங்களுக்குமுன் இவரது மாமனிடமிருந்து இவருக்கு யார்க்ஷையர் இன்கிராம் கிராமம் வந்தது. இதில் இவர் அதிகம் உழைத்து அனுபவம் பெற்றுள்ளார்.

இவர் சிறுவராயிருக்கையிலேயே தமது இடது கையை இழந்துவிட்டார் எனினும் இத்துடன் யுத்த சமயம் போர்க்களம் சென்றிருந்தார்.

* * * * * (ஸ்வராஜ்யா)

## நாயின் நன்றி.

மூர்ரே என்னும் ஒரு ராணுவ உத்தியோகஸ்தர் "ரெக்ஸ்" என்னும் ஒரு நாயை வளர்த்துவந்தார். அவர் இறந்துபோனபோது அந் நாய் அவரது சவப்பெட்டியினருகில் வந்து படுத்துக்கொண்டது. பிறகு அவரை அடக்கம் செய்வதற்கு ஜனங்கள் கொண்டுபோகையில் அது அந்தப் பிரேத ஊர்வலத்துடன் கல்லறைவரையில் சென்றது. பிரேத அடக்கம் ஆனபின் இரண்டுநாள்வரையில் அது காணப்படவில்லை. திரும்ப வீட்டுக்கு வந்தது. ஆனால் ஒரு ஆகாரமும் சாப்பிடாமல் துக்கப்பட்டு, உயிரைவிட்டது. என்னே இந்தப் பிராணியின் நன்றிதான்!

* * * * * *

## 100 வயதாகியும் டாக்டரை கண்டதேயில்லை.

இங்கிலாந்தில் ஒரு மாதுக்கு 100 வயதாகிவிட்டது. இவ்வளவு வருஷங்களாக அவள் டாக்டரின் அவசியத்தைத் தேடியதேயில்லையாம். தினசரி தன் வீட்டிலிருந்து கால்மைல் தூரமுள்ள மாதாகோயிலுக்கு நடந்துதான் செல்லுகிறாள். காதுமட்டும் கேட்கவில்லையேயன்றி, மற்றப்படி ஒருவகையிலும் அவளுக்கு தேக திடம் குறையவில்லை. தனது கிராமத்திலேயே காலம் முழுதும் கழித்திருக்கிறாள்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## குரோதன௵ மார்கழீ௴—கலியுகாதி 5027, சாலிவாகனம் 1848, பசலி 1335—கொல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1344, இங்கிலீஷ் 1925௵ டிசம்பர்௴—1926௵ ஜனவரீ௴

| மார்கழீ | டிசம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | செவ் | ● 45-20 | கேட்42-40 | ம42-40அ | சர்வத்ர அமாவாசை, மூல கார்த்திகை 7-58 |
| 2 | 16 | புத | பிர37-43 | மூல36-55 | ம36-55அ | புஷ்யசுத்தம் |
| 3 | 17 | வியா | துதி29-55 | பூரா30-55 | சித்60 | சந்திரதெரிசனம் 4-ம் பிறைபோல் தெரியும் |
| 4 | 18 | வெ | திரி22-8 | உத்24-52 | சி24-52ம | ருஷியாரம்பம் செய்ய |
| 5 | 19 | சனி | சது14-40 | திரு19-20 | சித்60 | மாச சதுர்த்தி விரதம் |
| 6 | 20 | ஞா | பஞ்8-3 | அவி14-28 | ம14-28சி | கரிநாள், சஷ்டி |
| 7 | 21 | திங் | சஷ்2-15<br>சப்57-25 | சதை10-30 | சி10-30ம | அவபாகம் |
| 8 | 22 | செவ் | அ53-48 | பூரட்7-35 | மர7-35அ | மகராயனம் 19-0 |
| 9 | 23 | புத | நவ51-28 | உத்5-53 | சி5-53ம | பிரயாணம் விலக்க |
| 10 | 24 | வியா | தச50-23 | ரேவ5-20 | சித்5-20அ | கதிரறுக்க, மாடுவாங்க[சீ |
| 11 | 25 | வெ | ஏ50-30 | அஸ்6-3 | அமி6-3சி | கரிநாள், ஸ்மார்த்தஏகாத |
| 12 | 26 | சனி | து51-45 | பர✕7-53 | சி7-53அ | வைதண்டஏகாதசி, கிருத் |
| 13 | 27 | ஞா | திர54-18 | கிரு10-55 | சித்60 | பிரதோஷம் [திகை |
| 14 | 28 | திங் | சது57-53 | ரோ15-5 | அமி60 | கெற்போட்ட ஆரம்பம் 12-38, |
| 15 | 29 | செவ் | ○60 | மிரு20-13 | சி20-13ம | பௌர்ணமி, ஸ்ரீ நடராஜர் அபிஷேகம் |
| 16 | 30 | புத | பவு2-22 | திரு26-18 | சித்60 | ஆருத்திரா தரிசனம் |
| 17 | 31 | வியா | பிர8-0 | புன33-13 | அமி60 | |
| 18 | 1926௵ ஜனவரீ 1 | வெ | து14-18 | பூசம்40-45 | மர60 | |
| 19 | 2 | சனி | திரி20-58 | ஆயி43-33 | ம48-33அ | |
| 20 | 3 | ஞா | சது27-48 | மகம்56-23 | ம56-23சி | |
| 21 | 4 | திங் | பஞ்34-8 | பூரம்60 | சித்60 | |
| 22 | 5 | செவ் | சஷ்39-43 | பூரம்3-33 | சித்3-33அ | |
| 23 | 6 | புத | சப்43-55 | உத்9-40 | அ9-40மர | |
| 24 | 7 | வியா | அ46-28 | அஸ்14-25 | சித்60 | |
| 25 | 8 | வெ | நவ47-0 | சித்17-22 | சித்60 | |
| 26 | 9 | சனி | தச45-35 | சுவா18-23 | அ18-23சி | |
| 27 | 10 | ஞா | ஏகா42-5 | விசா17-28 | மர60 | மத்வ சர்வ ஏகாதசி |
| 28 | 11 | திங் | துவ36-58 | அனு14-33 | சித்60 | வியாதியஸ்தர் மருந்துண் |
| 29 | 12 | செவ் | திர30-10 | கேட்10-5 | ம10-5அ | மாச சிவராத்திரி [ணை |
| 30 | 13 | புத | ச● 22-13 | மூலம்4-18<br>பூரா57-38 | ம4-18அ | மகாரவி நா-34-0, அமாவாசை, போகிபண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | 3உ வி-செ<br>16 ,, விரு-ச<br>21 ,, கும்-சுக்<br>22 ,, தனு-பு | | ரா |
| குரு<br>கே<br>சுக் | | | |
| சூரி | புத | சனி<br>செ | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.